ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# திருமுட்டப்
# பதிற்றுப்பத்தந்தாதி

இஃது

திருச்சித்திரகூடம்

ப்ரபந்நவித்வான்

ஸ்ரீமாந்



## அழகியமணவாளராமாநுஜ

ஏகாங்கிஸ்வாமிகளால் செய்தருளப்பட்டு

கள்ளக்குறிச்சி

**ஸ்ரீமாந் தேவராஜராமாநுஜதாசரவர்களாலும்**

துரிசிலூர்

ஸ்ரீமாந் அரங்கமன்னார்தாசரவர்களாலும்

திருச்சித்திரகூடம்

ஸ்ரீ பராங்குச விலாச அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

ஸ்ரீபராங்குசர் திருவவதாரவருஷம்

௫௲௧௧ ஆகிய சாதாரணஹூ பங்குனிமீ





ஸ்ரீ

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

# திருமுட்டப்
# பதிற்றுப்பத்தந்தாதி.

## காப்பு.

பூமருவு திருமங்கை புணர்மார்ப னுவந்தருளும்
பாமருவு திருமுட்டப் பதிற்றுப்பத் தந்தாதி
மாமருவு மடவுலகில் வழங்கமறைத் தமிழ்செய்த
காமருவு சடகோபன் கழலிணைகள் காப்பாமே.

## நூல்

திருமுட்டத் தருள்பொறைநாய்ச்
சியரிருபா திகழலிணை
செருமுட்டத் திகிரியிடை
சேரிருகை சிறப்பவொளிர்
பொருமுட்டத் தண்டகற்சொல்
பூவரா கப்பரமன்
கருமுட்டக் கரிசொழிக்குங்
கழலிணைகள் கண்டேனே. (க)

கண்டுதொழு தெழுவாய்நீ
கனகமணி மாளிகைமேற்
கொண்டறவழ் திருமுட்டக்
கோபுரநீள் கோயிலினுள்
கண்டகவம் புயவல்லித்
தாய்புருட காரத்தால்

பண்டுலகை யிடந்தபிரான்
பணிந்திரப்பொற் பதநெஞ்சே. (௨

நெஞ்சாமுறை செயலொருங்க
நெறிநிற்பார் பொய்பேசார்
வஞ்சகஞ்செய் யாரிகழின்
மாழ்கிடார் புகழ்விரும்பார்
கொஞ்சமுமன் னியர்குற்றங்
கூறிடார் குணங்கொள்வார்
மஞ்சுதவழ் பொழின்முட்ட
மாதவன்ற னடியவரே. (௩)

அவலமுற நிலையில்லா
தலைநகெஞ்சறும் புன்விடய
சவலமுறு மெனமனமுன்
சரணமல ரிணைசார்ந்து
கவலையறக் காத்தருள்வாய்
கடிமதில்சூழ் முட்டமிளிர்
குவலயமுன் னிடந்தளிக்
கோலவுருக் குணாகரன்றே. (௪

குணம்பொறுத்த பெரியார்மீக்
குறைகூறித் திரிந்துபிறர்
பணம்பறித்தாசை சமுசாரப்
பாசத்திற் பட்டுழன்று
பிணம்பொறுத்த வுடல்வளர்க்கு
நீசனெனை யாளுதியோ
மணம்பொறுத்த திருமுட்ட
மாநகர்வாழ் மாயவனே. (௫

மாயசமு சாரமெனு
மாக்கோர துக்கமிகுந்
தீயபெருங் கடலழுந்தித்
திகைத்தேனை யாளுலகமெலாந்
தாயனைய தாட்டுணையைத்
தந்துகதி சேர்த்தருள்வாய்
தூயதிரு முட்டமொளிர்
சுகரமாக தற்பரமே. (௬)

மேதகுசீ முட்டமிளிர்
விண்டுவின்மெய் யடியர்சிரச்
சேதமர செய்திடினுஞ்
சிந்தைகலங் காமகிழார்
ஏதமறு மேகமிழி
யீரம்புனலை நோக்குறுமச்
சாதகம்போற் பார்த்திருப்பர்
தாடாள னருட்டகவே. (௭)

அருள்பெறுமெய் யடியர்தமக்
கணுவளவு மீந்திலேன்
தெருள்பெறுமாழ் வார்பதின்மர்
செய்கலைக டேர்ந்துமிலேன்
இருள்பெறுமூத் திரக்குழிக்கே
யேங்கினன்யான் காலமெலாம்
மருள்பெறுமெற் கருண்முட்ட
மன்னுபுகழ்ப் பரஞ்சுடரே. (௮)

சுடர்கொண்ட தோளாதா
சோறுபணங் கூறையென

இடர்கொண்ட லற்பர்தமை
யெத்தியிர வாதினிநீ
தொடர்கொண்ட திருமுட்டச்
சுந்தரத்தோட் டோன்முதலைப்
படர்கொண்ட புகழ்ப்பரனைப்
பரவுதிநீ பாழ்நெஞ்சே. (௯)

பாழும்பு ழுக்கணிறை
பல்லீயு மூத்திரமுஞ்
சூழுப்புண் ணுருமிகு
நோயுமெலும் புந்தசையுந்
தாழும்பெண் ணுடல்விழையுந்
தனிநெஞ்சே சங்காழி
வாழுங்கைத் திருமுட்ட
மாலைவிழைந் துய்வாயே. (௰)

வேறு.

வாய்நாறு மூழலிரு கண்பீளை
நாசிசளி வழிந்து நாறும்
நோய்நாறு மூத்திரத்தி னழுநாறும்
யோனிமல நாக்க நாறுஞ்
சீய்நாறு முடற்செறிந்த மங்கையரைச்
சீசியென் றிகழ்ந்து நீயவ்
வேய்நாறுந் தளவமிளிர் திமுட்டத்
திருமாலை விழைவாய் நெஞ்சே. (௧௧)

விழைநோக்க மனநாளும் விண்மொழிகள்
வாய்நோக்க விழிகள் நோக்க

உழைநோக்க மங்கையரைச் சுவையுணவை
நாநோக்க வுழல்வே னந்நாள்
மழைநோக்கக் குன்றெடுத்து நிரைகாத்த
திருமுட்ட மாலே யென்றன்
பிழைநோக்க லில்லாம லுனைநோக்கப்
பெரிதருள்செய் பேயனேற்கே. (கஉ)

செய்யபெரு நின்கோயி லனுதினமுங்
காத்தினிது தலஞ்சிய்த் தூய்யப்
பையவெனத் திருமுகப்பே கூவியெனைக்
குற்றேவல் பணிகொண் டாள்வாய்
மெய்யடியவ னிதரன்மனை மேவியவன்
சுசியுருசி விருந்தை யுண்ட
ஐயதிரு முட்டநக ரமர்ந்தருளு
மரிந்தமனே யமரர் கோவே. (கங)

கோவாகுஞ் செல்வமதி யார்கொம்மை
முலைமடவார் மயக்கங் கொள்ளார்
ஒவாகு முடல்பேணு ருன்மத்த
ரெனத்திரிவா ருடுப்பார கந்தை
சாவாகுங் காலமெதிர் பார்ப்பாரொப்
பிழைபிறர்செய் தாலு மெண்ணார்
தேவாகுஞ் சீமுட்டத் திருமாற
னடியாரவுந் தெள்ளி யோரே. (கச)

தெள்ளியமெய்ஞ் ஞானபத்திச் செல்வமிகு
பலகலைக டேர்ந்த மேலோர்
தள்ளியமுக் குற்றவுண வினையுண்டு
நாமதத்தாற் கொழுத்து மாதர்

ஒள்ளியவேற் கண்வலைப்பட் டுருகிமுலை
நலம்வேண்டி யுழல்வே னென்னை
எள்ளியரு ளியாநீ டேற்றுநிசி
முட்டமிளி ரிமையோ ரேறே. (கரு)

இடையவர்சேர் திருமுட்டத் திறைவமறு
வரசென்று மெட்டெழுத்தின்
அமைவுருமுப் பதப்பொருளு மறிந்தவண
மனுட்டான மற்ப மேனுஞ்
சமைதரப்பெற் றுடையனலேன் சாந்தமுத
லானகுணஞ் சற்று மில்லேன்
நிமையளவுங் கொடுங்காம நீக்கமிலே
னுய்யும்வழி நினைந்தா னாயே. (கசு)

நினைப்பொருவும் பிழைநினையா தாளவல்ல
தெய்வதமெந் நிலத்து மில்லை
எனைப்பொருவுங் கொடுந்தீய வினைகளைப்
பெருமபாவி யெங்கு மில்லை
கனைப்பொருதண் கடலுலகிற் பிணவிருந்திட்
டடிதொழுத கண்டா கன்னன்
தனைப்பொருவில கருணைபுரிந் தாண்முட்டத்
தலத்தெந்தாய் தயைசெய் வாயே. (கஎ)

தாயவனை யுலகெல்லாந் தந்தவனைத்
தண்டளவத் தாரான் றன்னை
மாயவனைத் திருமுட்ட மாதவனை
யன்பர்வயின் மாலா னானைத்
தூயவனை முனிவர்தொழுந் தொன்முதலைத்
தூமணியைத் தோஞன் கானை

மேயவனை நனிதொழுவா ரெவரேனும்
 விண்ணவரின் மேலார் தாமே. (கஅ)

தாமரைக்கட் டற்பரனைச் சபரிகழித்
 தருந்துகனி தானுண் டானைப்
பாமருமே வுலகனைத்து மடைத்தருளுந்
 திருநாபிப் பதுமந் தானைக்
காமருசீ முட்டமொளிர் கடவுளர்தம்
 பெருமானைக் கனலித் தேவை
நீமருவித் தொழுதொழுவாய் விடயனைந்
 துருகிநிலை நிலவா நெஞ்சே. (க௯)

நெஞ்சமதிற் பரதாரம் பொருள்கவரு
 நெறியலது நினைந்து நைந்தேன்
வஞ்சகம்பொய் வசைபுகன்றேன் வாளாவற்
 பரைத் துதித்து வளர்த்தேன் குக்கி
கொஞ்சமுமஞ் சாதளவில் கொடுஞ்செயல்கள்
 செய்திளைத்தேன் கூற்றுக் கஞ்சித்
தஞ்சமென நினைவடைந்தேன் சரண்டந்தாள்
 திருமுட்டச் சாமி நீயே. (உ௰)

வேறு

நீயேதொல் லுலகனைத்து நிறைந்து காக்கும்
 நிகமாந்தமெய்ப் பொருளென் றுணர்ந்தும் பொல்லா
நோயேபெய் மலவுடலை நோக்கி நாய்போ
 லுழைந்துபிறர் கடைதோறும் வருந்திநாளும்
பேயேபோற் றிரிந்துழலும் பிழையே னென்னைப்
 பெருங்கருணைக் கிலக்காக்கி யாள்வாய் கால்விண்
தீயேமண் புனலாகித் திகழு முட்டத்
 திருநகர்வாழ் கேழலுருச் செங்கண்மாலே. (உக)

செங்கபல்பாய் வயன்முட்டத் திருமா லன்றிச்
சிந்தைசெயார் பிறதெய்வம் வணங்கார் சொல்லார்
மங்கையர்பான் மால்கொள்ளார் மாழ்கார் துன்ப
மலிநரகிடிலு முடன்மான மகன் றிருப்பார்
சங்கையிலார் நட்புபகை பொய் பொறாமை
சழக்குமிகு சினமிருப்பு வெறுப்பொன் றில்லார்
வெங்கலியைக் கடந்திருப்பார் யாதும் வேண்டார்
மெய்ஞ்ஞான நிலையுணர்ந்த மேலோர் தாமே. (௨௨)

மேலாகும் விண்ணவர்சேர் திருமுட் டத்துண்
மேயவரா கப்பரமே வேறுநன் னூர்பால்
மாலாகு மனம்பொறியைத் துடையேன் வாளா
மயங்கியலை யுறுதிரம் நரம்போ டென்பு
தோலாகு மூத்திரம்பு டருவி யோடிச்
சுணங்கனெனத் திரிதலைந்து தொலைத்தேனுட்கள்
நாலாகு மறைபுகழ்பின் னடிக்கண் ணூறும்
நன்னெஞ்சை யெனக்கிந்நா ளிலத்தீ வாயே. (௨௩)

ஈயெறும்பு குளவிபுழு கழுகு காக்கை
யானைநரி தேள்கழுதை பாம்பு பூனை
நாயெலியே யனைமரங்கல் லொடுமண் டேவ
நரவசுர சன்மமெலா மெடுத்து நானிப்
பாயலைநீர்க் கடல்புடைசூழ் புலகிற் பட்ட
பாடனைத்தும் போதுமினிப் பரிந்து மற்றோர்
தாயகட்டிற் பிறவாமற் றனைசெய் முட்டத்
தலத்துறையுந் தண்டுளவத் தனித்தா யோயே.(௨௪

தாரானை வைசயந்தி யாழி சங்கந்
தரித்தானைச் சகமனைத்துங் காப்பான் றன்னைச்

சீரானை முனைநின்ற செங்கண் மாலைச்
சீதரனைப் புண்ணியர்தஞ் சிந்தை யானை
ஏரானை மெய்த்துவந்த வெம்மான் றன்னை
யீடெடுப்பி றப்பரனை யெழில்சேர் முட்டத்
தூரானைக் கண்களிப்பக் கண்டு துள்ளி
யுருகிநெடித் தென்றுகொ[illegible] வுய்யு நாளே. (௨௫)

நாளுமறு மாதரைமெய் நம்பிக் கெட்டேன்
நானெனதென் றிருமாந்து நலிவே பட்டேன்
கோளுமறக் குறளுமுரைத் தறவே பொல்லாங்
கூசிடவே குடிகெடுத்தேன் கொடிதே செய்தேன்
ஆளுமுனை யறுவளவு நினையா தந்தோ
வறக்கொடிய பாதகரை யடுத்து நட்டேன்
வேளுநனி வெள்குமெழின் முட்ட மேய
வேள்விவரா கப்பரமே வினைதீர்த் தாளே. (௨௬)

தீராத வன்புறுமெய் யடியா ரோடு
சேர்ந்துதிரு முனைநின்றே தேம்பித் தேம்பி
ஆராத களிப்பினிரு கண்ணீர் வார
வழுதுருகித் தொழுதுதொழு தாடி யோடித்
தூராத பத்திநலை சிறப்பத் துள்ளித்
துள்ளிநில மிசைப்புரண்டு துதிப்ப தென்றோ
சாராத புனற்கயத்துட் கயல்பாய் முட்டத்
தொன்னகர்வாழ் சூகரமாஞ் சுகுணக் குன்றே. (௨௭)

ன்றெடுத்த கோளரியே நந்தன் கொண்ட
குறைவறுஞ்சீர் பெருஞ்செல்வக் கொத்தே முத்தே
ன்றுதைத்த பிருகுமுனிக் கருள்செய் மையே
யற்புதமே யாயர்குலக் கொழுந்தே பொன்னே

கன்றெடுத்தா விளவெறிந்த கரும்பே கண்டே
 கற்பகமே முட்டமொளிர் கனலித் தேவே
நின்றபிர ணவப்பொருளை நிபிடா னந்த
 நீள்சுடரே பிழைநினையா தெனையாள் வாயே. (௨௮)

ஆளாக வெனக்கென்றும் மடவார் பாலந்
 தகனாகப் பிறர்மறையிற் செவிடனாகக்
கோளாகப் புறங்கூற்றி லூமை யாகக்
 குவலயத்தில் யானிருக்க வருள்கூர்ந் தாள்வாய்
நீளாக மலமலர்ப்பெண் ணிலபெண் காந்த
 நீசவிரா வணனெறிந்த நெடுங்கூர் வேலை
வாளாக மேற்றுவிபீ டணனைக் காத்த
 வண்மைமிகு திருமுட்ட நகர்வாழ் மாலே. (௨௯)

மால்கொண்ட கன்மமல வுடனா னென்றும்
 மற்றவெலா மெனதென்றும் மயங்கி நாளுஞ்
சேல்கொண்ட கருங்கண்ணார் திறத்திற் சிக்கிச்
 சிந்தையுரை செய்கையினாற் பாவஞ் செய்தேன்
வேல்கொண்ட வியமனெனை வெறுத்துச் சீறி
 வேதனைசெய் திடவருமவ் வேளை காப்பாய்
சூல்கொண்ட சங்கினமுத் தீனுஞ் செய்சூழ்
 தொல்பெரிய முட்டமொளிர் சுருதித் தேவே. (௩௰)

வேறு.

சுருதியி னொலிமா ருதந்தா முட்டத்
 தொல்பெரு நகருறை சுகுண
பொருதிரைக் கடல்சூழ் புவிதனைப் பாயாச்
 சுருட்டிய பொற்கண னுடலிற்

குருதியின் றெழுகக் கொன்றமெய்ஞ் ஞானக்
கோலநல் லுருக்கொள்மா கொழுந
அருதியுன் னடியிற் பத்தியெற் கிலங்கத்
தாழ்ந்தனன் சரணையானே. (௩௧)

யானென தென்னுஞ் செக்கினிற் சுழன்றேன்
யாதுநோக் கினுமெனக் கெனக்கென்
றூனவப் பாழா மாசையிற் கொழுத்தே
னரும்பெரும பாவத்திற் பழுத்தேன்
ஊனம ரழியிவ் வுடலினி யெய்தா
தொழித்துநின் னுயர்பதந் தருவாய்
தேனமர் பொழில்சூழ் முட்டமா நகரந்
திகழ்தரு தெய்வநா யகனே. (௩௨)

நாயெனக் குரைத்து மேல்விழுந் திரந்தார்
நடுங்கிட வில்லைசீ சீபோ
நீயென வுரப்பி நெடுஞ்சொலான் மறுத்த
நீசரும் வெறுக்குமா நீசப்
பேயனேற் கருள்வாய் கத்திர பந்து
பெரும்பதம் புகவருள் பெரியோய்
தூயநன் முட்டத் தொன்னக ரமர்ந்த
சுந்தர சுகப்பரஞ் சுடரே, (௩ .)

பரம்பொரு ளரியே பரந்துளன் யாண்டு
மெனச்சிறுன் பகர்ந்தவா றங்குந்
திரப்பெறு தூணி லக்கணந் தோன்றித்
தீயனு மிரணிய கசிபன்
டரந்தனைப் பிளந்த வரியுரு வத்தா
யொருதிரு முட்டம்வாழ் வேதச்

சிரந்தனி லொளிருஞ் சீதரதீரா
வெண்பவ வினைகடீர்த் தருளே. (௩௪)

அருள்பெறுந் திருமெய் யடியர்போல் வேட
மணிந்துல கத்தினை மயக்கிப்
பொருடனைப் பறித்துப் புல்லரைப் போற்றிப்
புன்புலா னுடலினைப் புரந்தேன்
இருடரும் புவியில் பாவியென் றெப்பா
ரில்லைநா னுய்புநா ளென்றோ
தெருடரு முட்டச் செல்வமா நகர்வாழ்
திருமகிழ் செங்கண்மா றேவே. (௩௫)

தேவரு மிறைஞ்சு முட்டமா நகரந்
திகழ்திரு மங்கைசேர் மார்பா
மேவரு ஞானத் தமிழ்மறை விளம்பு
மெய்ப்பரா பரவிடையூர்தி
ஓவரு மோட்டீ றொழித்தருள் புரிந்த
வுத்தம வொப்புயர் வில்லாய்
காவரு மின்பூங் கழலிணை யளித்துக்
காத்தருட் கயவனேன் றனையே (௩௬)

காத்தரு ளளிக்குங் கருணையங் கடவுள்
கண்ணுத லயன்றொழுங் கடவுள்
கோத்தமா முனிவர் குலந்தொழுங் கடவுள்
குறைவில்சீர் குணகணக் கடவுள்
பூத்தரு பொழில்சூழ் முட்டம்வாழ் கடவுள்
பூவராகப் பெயர்க் கடவுள்
ஏத்தரு மறையின் கடவுண்மா மலர்த்தா
ளிணையடைந் துய்தியென் னெஞ்சே. (௩௭)

நெஞ்சமே பணத்தைச் சிறுதுரும் பென்ன
நெரிந்தசிற் றோடென நினைப்பாய்
நஞ்சமே நாவுக் குருசியென் றொழிப்பாய்
நானிலத் தினைநற் றாய்போல்
மஞ்சமே யோதி மாதரை மதிப்பாய்
மறைபுகழ் முட்டமா தவன்றாள்
தஞ்சமே யென்னத் தாழ்ந்தினி தடைவாய்
சன்மம தொழியுஞ்சத் தியமே. (௩௮)

சத்தியஞ் செய்து பிருகுமார்க் கண்டன்
றாறுப ராசரன் றருமன்
வித்திய வேத வியாசன்மெய்ஞ் ஞான
வீடுமன் சுகனெழு வாயோர்
கத்திய பரமே கட்செவி யதன்மேற்
கண்வள ரருமறைச் சிரமே
நித்திய கயஞ்சோ முட்டமா நகர்வாழ்
நேமியோய் நீசனேற் கருளே. (௩௯)

நீசனே னழியு நெடும்புலாற் புழுக்
கூறையுட னிலையென நம்பி
ஆரையாங் கடலு ளழுந்திதாய் தந்தை
யனுசன்றா ரம்மக வெனுமப்
பாசமாம் பிணியிற் பட்டொழிந் தேனுன்
பாதமே சரணமென் றடைந்தேன்
தாசனு மெனைக்காத் தருடிரு முட்டத்
தனிநக ருகந்த தற்பரனே. (௪௰)

## வேறு.

தற்ப ரன்பரந் தாமன்று மோதரன்
றான வர்ச்செறுந் தார்க்கிய கேதனன்
கற்பொ ருப்பல்வா ணாசுரன் கைகளைக்
கண்ணு றுதல்கால க்கட்டழித் தாண்டவன்
பொற்ப றமபொலி முட்டம்வாழ் புண்ணியன்
பூவ ராகன் மலர்ப்பதம் போற்றிவாழ்
சொற்பெ ருந்தொண்டர் தூயபொற் றாளிணை
தொண்டுசெய்துதொழுதெழென்னெஞ்சமே.(சக)

நெஞ்ச ணைந்துக ரைந்துகண் ணீருக
நேயி னீண்டது மாநிரை மேய்த்ததும்
பஞ்ச வர்க்குத்தூ தானதும் பார்த்தன்றேர்ப்
பாக னாயதும் வெண்ணெய்பா லுண்டதுந்
தஞ்ச மாகச்சீ முட்டத்த மர்ந்ததுஞ்
சாலப் பாடிக்கூத் தாடுமெய் யன்பர்தம்
எஞ்ச லில்குழுக் கண்டிடக் கூடுமே
யிருநி லத்தது கண்பய னாவதே. (சஉ)

ஆவ லாகப் பிச்சையேற் றாயினு
மனுதி னம்பசி நோயவித் துக்கொடு
சீவ ராக நயினா ருகந்திடுஞ்
சீமுட் டத்தலஞ் சேர்ந்தங் கிருந்திடிற்
பாவ மாவன யாவும் பறந்துபோம்
பரவை சூழுல கிற்பவ மோயுமால்
தேவ ராகிய நித்தர் திகழ்வதாந்
தெளிவி சும்புநித் தித்திடேர் திண்ணமே, (சங)

திண்டி றற்பொறை ஞானமெய்ப் பத்திசால்
தேசு றும்பல் கலைதெளி சீரியோர்
கண்டி ருக்கறு நெஞ்சந் தயங்கபொய்த்
தவறு கூறியெஞ் ஞான்றுஞ் சகத்தினிற்
பண்டி யைவளர்க் கும்படு பாவிநான்
பதக னற்றுன் னருணேர் படுங்கொலோ
வண்டி மிர்பொழில் சூழ்முட்ட மாதவ
வைய மேழிரண் டுண்டசெவ் வாயனே. (சச)

வாயி லிட்டநீர் வாரம னந்தடு
மாற வச்சுறக் கூற்றுயிர் வெளவுநாள்
தாயின் மக்கடந் தைதமர் தாமழச்
சவமெ னப்படை சாத்திச் சுமந்துபோய்ப்
பேயி லென்றுவை குப்பிணக் காட்டினிற்
பெரிது நாய்நரி பேணியு வந்திடத்
தீயின் பண்டியுட் சேர்ப்பதன் முன்னமே
சீமுட் டத்தவற் சிந்தைசெய் துய்ம்மினே. (சரு)

உய்ய லாகுமு பாயமற் றொன்றிலை
யுவரி சூழுல கின்கணொன் னுள்ளமே
செய்ய ஞானந் திருந்துசீ முட்டம்வாழ்
திருவி ளையகன் றெய்வசி காமணி
பையரா வணைத் தற்பரன் றொடொழும்
பரம பாகவ தாபிமா னம்மலால்
பொய்ய லாதவர் புண்ணிய பொற்பதம்
போற்றி நீயடை வாய்புக லாகவே. (சசு)

ஆக மாவக லாதப ராபர
வறந்தி ருந்துமுட் டத்தம ரச்சுத
மோக ராகது வேடமு ளைத்தது
மூத்தி ரம்மல நாற்றமு திர்ந்தது
காக நாய்வெளி யாகிற்கொ ளெம்புலால்
கனத்த தென்புதி ரந்தோல் கலந்தது
தேக நானிதை வீணிற்ச மந்தினி
திகைத்தி டாதருண் முத்தித் திருவையே (௨௭)

திருவி லாதபொய்த் தெய்வதம் போற்றுவார்
சிலர்ச கத்திற் றிருவுடைச் செங்கண்மால்
பொருவி லாதமுட் டத்துவாழ் பூபதி
புனித வேதபு ராதன புண்ணியன்
செருவி லாதவன் றேர்மறை நேமியான்
செல்வ நாரணன் றின்கழ லேத்திடார்
கருவி லாதரக் காட்சித் திருவறக்
காலம் வீணிற் கழிப்பரென் கன்மமே. (௨அ)

கன்ம மன்னுகா சாசை கடிந்திலேன்
கனவி னுங்கொடுங் காமங்க ளைந்திலேன்
வன்ம மன்னும னத்திற்பொ றாமைபொய்
வஞ்ச மச்சரம் வெஞ்சின மாய்த்திலேன்
சன்ம மன்னுமென் றஞ்சிநின் றாளிணை
சரண மென்றடைந் தேன்றயை செய்தருள்
தன்ம மன்னுமுட் டத்தலஞ் சார்ந்தபொற்
சக்க ரக்கைச் சநார்த்தனச் சாமியே. (௨௯)

தனமடர்ந்த மடந்தையர் தங்கணுந்
தாவு வேற்படை தாக்கத் தயங்கினேன்
மனமடர்ந்த மதியையல் குல்லெனும்
வல்ல நாகம்வி ழுங்கிட மாழ்கினேன்
சினமடர்ந்த சிறியனு மென்னைநின்
றிருவ ருட்கிலக் காக்கியாள் செய்யறந்
தினமடர்ந்தமுட் டத்தெழுஞ் சிதர
நீத கன்றநல் வேதியர் தெய்வமே. (ருய)

## வேறு.

வேதியர் மறையோ தோசை
விழாவோசை வேள்வி யோசை
நீதற வயருஞ் சீசா
திருமுட்டஞ் சேர்ந்த செல்வா
கோதற வாண்டாள் சூடிக்
கொடுத்தமா மணங்கொண் மாலை
ஆதரத் துகந்து சூடு
மழகவெற் கருள் செய்வாயே. (ருக)

வாய்மைநல் லொழுக்க மில்லேன்
மானம்வெஞ் சினத்திற் பொல்லேன்
தூய்மைசற் றகத்தி லில்லேன்
சூதன்யா னடுவே நில்லேன்
வெய்மையீங் கரஞ்சேர் முட்ட
மேயபா ரிடந்த வேந்தே
செய்மையம் மலர்த்தா ளேத்துஞ்
சிந்தையெற் கருள்செய் நீயே, (ருஉ)

செய்யமுட் டத்துட் செவ்வாய்
தெற்குறத் திகிரி சங்கார்
கையிடை மருவ மேல்பாற்
கமலக்கண் ணோக்க நிற்கும்
ஐயனைத் தொழுது பாடி
யழுதுள்ள முருகி யாடி
வையகம் புரண்டு வாழ்த்தும்
வாழ்வுகாண் மேலாம் வாழ்வே. (௫௩)

வாழ்வுதான் வாய்க்குங் கொல்லோ
மாபாவ வறிஞ னேற்குத்
தாழ்விலா முட்டத் தார்ந்த
தனிமணி வண்ணன் கண்ணன்
ஏழ்விடை யடர்த்த வெந்தை
யிருங்குண கணப்பே ராழி
ஆழ்திரு வடியார் தாளுக்
காட்பட்டு நிற்கு மாறே. (௫௪)

மாறிலாப் பாவி யேனை
வன்கண்ணை ரைவர் பற்றித்
தேறிலாக் கள்ள வுள்ளந்
திகைக்கவின் றடர்க்க நொந்தேன்
ஈறிலா வின்பச் செல்வ
மீந்தருண் முட்டத் தேய்ந்த
வேறிலாக் கருணை மேவும்
விறலுடை யிமையோர் வேந்தே. (௫௫)

வேந்தனே யிமையோர் போற்றும்
விமலமா முட்டம் வாழ்வே
சாந்தனே பலவா மண்ட
சராசர நிறைந்து காக்குஞ்
சாந்தனே சருவ சான்றே
தாமரை மலர்மேன் மங்கை
காந்தனே களைவாய் நாயேன்
கடுவினை களைக ணீயே. (ருசு)

களைகண்மற் றில்லே னென்னோய்
களையினுங் களையா யேனும்
வளைகனற் றிகிரி யேந்தும்
வலவதாய் தந்தை காலில்
தளையறத் தோன்றுந் தாமோ
தரவெழிற் றிருமுட் டத்தாய்
அளைவெண்ணெய் பாலூட் டுண்ட
வருங்கள்வா வாய ரேறே. (ருஎ)

கள்வன்யான் கயவன் பொய்யன்
காமுகன் கடுங்கோ பத்தன்
உள்வன்மை யொழிந்தி லேனென்
னூழ்வினை யொழித்தாட் கொள்வாய்
முள்வன்றாள் முளரிப் பொய்கை
முட்டத்துண் முகுந்தா வஞ்சப்
புள்வல்வாய் பிளந்த மாயா
பொற்கையேந் தாழி யோயே. (ருஅ)

ஆழிக்கண் ணனந்தன் றன்மே
 லனந்தல்செய் யனந்த னன்றே
றேழுக்க வாகச் செற்ற
 லேதமின் முட்டத் தெந்தை
ஊழுக்க தறிபான் டன்ற
 றுனசசொல மனம்வா யில்லாத்
தாழிகரு மோக்கந் தந்த
 தகவுரை தகைமைந் தாமே. (௫௯)

தாமத்தா லாரவோ டாய்ச்சி
 தளைந்திடத் தளையுண் டேங்கும்
வாமத்தாய் முட்டம் வைகும்
 வராகமா வுருவத் தேவே
ஈமத்தா டியவவ் வீச
 னிரப்பொழிக் கண்ட வெந்தாய்
காமத்தாற் கலங்கா தியானுன்
 கழலெழுக் காத்தாள் வாயே. (௬0)

வேறு.

காத்த ளிக்குங்கண் ணாகரிக் கட்டையைக்
கோத்த லத்துக்கெ னச்செய்கு ணாகரா
பூத்த பொய்கைமுட் டந்திகழ் புண்ணிய
வத்த நின்னையெற் கின்னரு ளீதியே. (௬௧)

ஈதி யுன்கழற் பத்தியெ னக்கிறை
ஆதி யென்றுமை யானைக்க ருள்புரி
வேதி யர்திகழ் முட்டத்து மேவிய
சோதி லம்புய வல்லிதன் கொண்கனே. (௬௨)

கொண்க ணம்மலர் மங்கைகு லாவிய
தண்க யந்திகழ் முட்டத்த லத்துவாழ்
எண்க டந்தவெ ழிற்குணத் தெந்தைதன்
ஒண்க ழறெழு வூழ்வினை யோயுமே. (௬௩)

ஓயு மிவ்வுட லோம்பிப்ப சாசும்புன்
ஞாயு மென்னவ லைந்துந லிந்துநான்
வாயுங் குக்கிவ ளர்த்தமா பாவியாள்
நீயு முட்டத்து ணின்றபொன் னேமியோய். (௬௪)

நேமி தன்னையி டந்தரு ணின்மலா
பூமி யின்முட்டப் பொன்னகர் மேவிய
சாமி பொய்யன்ச ழக்கன்சி னத்தன்வெங்
காமி யென்னைக்க டைக்கணித் தாள்வையே. (௬ )

தாள்ப ரப்பிமண் றும்விண் றுந் தாவிய
சூள்ப ரப்பிமு னிவோர்தொ ழும்பரா
வாள்ப ரப்பிய முட்டம்வாழ் மாபரன்
கோள்ப ரப்பிய கூரருள் வாய்கொலோ. (௬௬)

கொல்லும் வல்லயிற் கண்மலர்க் கொம்பனார்க்
கல்லு மெல்லு மகங்குழைந் தல்கலில்
தில்லும் பொல்லுஞ்செய் தேற்கருண் முட்டஞ்சேர்
நல்லு மெல்லிய லாங்கழற் கத்தனே. (௬௭)

கத்த னுக்குமுட் டத்துட்பொன் காந்தற்கு
சித்த னுக்குத்தி ருநெடு மாலுக்குச்
சுத்த னுக்குச்சு கமனத் தன்பர்க்குப்
பித்த னுக்குப்பித் தரல்லர் பித்தரே. (௬௮)

அல்ல லாமெனத் தோற்றிய ஞாலென
நல்ல தாரம்மக் கள்கிளை நன்னிலம்
இல்லம் யாவுஞ்சு டுமேலவர்க் கெலாம்
வல்ல முட்டமால் வைகுந்தங் கையதே. (௬௯)

கையி லங்குபொற் சக்கரக் கையனை
மெய்யி லங்கும லர்த்திரு மெய்யனைச்
செய்யி லங்குமுட் டந்திகழ் செய்யனைப்
பொய்யி லங்குநான் போற்றலும் பொய்யதே. (௭௰)

வேறு.

பொய்யு ணர்வடர் வதுபுலால் புறத்திடு
வதுபுனை யுடைநீங்கில்
வெய்ய தீவினை வேரது நோயது
மூத்திர மலம்விளையுஞ்
செய்ய தென்புதோல் சீயுதி ரத்தது
தேகநா னிதைச்சுமந்து
வைய கந்தனிற் பிறந்துழ லாதருண்
முட்டம்வாழ் மாதவனே. (௭௧)

மாத ரார்முடை மலப்புலா லுருவினை
மகிழ்ந்துமால் கொடுநாளுங்
கோத ருதவல் குல்லெனு மூத்திரக்
குழியில்வீழ்ந் திடவோடிக்
காத லார்ந்திடக் கனவினு மலைந்திடுங்
கயமைகூர் மடநெஞ்சே
வேத மாதவன் முட்டமா லுருவினை
வினைழபவ மொழிவாயே. (௭௨)

மொழிக டந்தசீ முட்டமா நகர்திகழ்
மொய்துழாய் முகுந்தாவோ
வழிக டந்தகார் வண்ணனே கண்ணனே
வானவர்க் கரசேயோ
சுழிக டந்தமா சுந்தர வெள்ளநற்
சோதியி னுருவேயோ
பழிக டந்தயான் பாவியே னருள்செய்வாய்
பதமலர் பணிந்தேனே. (எங)

தேன மர்ந்தபூஞ் சோலைசேர் முட்டமா
நகருறை திருவாளா
கான மர்ந்தவே டணைத்துணை கொண்டருள்
கருணையங் கடலரசே
வான மர்ந்தவவ் வணங்கிடா வமரர்கள்
வணங்கிடு மலர்த்தாளோய்
ஊன மர்ந்தவொப் பறும்பெரும் பாவியென்
னுடற்பிறப் பொழித்தருளே. (எச)

ஒழிவில் காலமெல் லாமுடன் மன்னியுன்
னுபயபொற் றுண்மலர்க்கே
வழுவி லாவடி மைமையப்புரிந் தடியனேன்
வாழுமா றினிதருள்வாய்
கழிவி லாவருட் காரணு முட்டமாங்
கடிநக ருறைகண்ணா
அழிவி லாரண முறைந்திடு மையபொன்
னாழியங் கையரசே. (எரு)

அங்கை யார்ந்தவைத் தேதியா யன்றுநற்
றுயென வணைந்தவடன்

கொங்கை யார்ந்தநஞ் சுண்டகோ பாலனே
கோதிலா நறுங்குளிர்நீர்க்
கங்கை யார்ந்தபொற் றாளனே கடிநகர்
முட்டம்வாழ் கருந்தாவே
சங்கை யார்ந்தவென் சன்மத்தைப் போக்குவாய்
தரணியிற் சரணீயே. (௭௬)

சரண மென்றடை யைவர்தம் பொருட்டிகற்
சதத்தர்பா ரதசசமர்வாய்
மரண மன்றடைந் திடப்புரி மாயனே
மருதுதை மலர்த்தாளோய்
கரண மொன்றமா தவர்புகழ் முட்டமார்
கண்ணனே பாழ்ம்பணத்தைத்
திரண மென்னவெண் ணிடத்தகுஞ் சிந்தைதந்
தொழித்தியென் றீவினையே. (௭௭)

தீவி னைதவிர்த் தாண்டிடுஞ் செல்வனைச்
சீமுட்டத் திருமாலை
பூவி னையிடந் தருள்புரா தனன்றனைப்
பூவராகப் பரனைத்
தேவி னைத்திரு வாளனை யடியர்தஞ்
சிந்தையிற் றிகழ்வானைக்
கோவி னையினைந் துருகிக்கூத் தாடுநா
ளென்றுகொல் கூடுவதே. (௭௮)

கூடு மாசையிற் கற்பின்மா தரைமனங்
கொண்டனன் பிறர்குற்றங்
கோடு மாசையிற் பெரியர்மேற் கோட்சொலிக்
கொழுத்தனன் பாழ்ம்பணத்தைத்

தேடு மாசையிற் சிறியரைப் புகழ்ந்தனன்
செல்கதிக் கமைந்துளேனான்
நாடு மாசையி லடைந்தன னருடிரு
முட்டம்வாழ் நாரணனே. (எசு)

நார ணன்றனை நான்மறை புகழ்திரு
முட்டநன் னகராளனைக்
கார ணன்றனை யுலகெலாங் காத்திடுங்
கடிமலர்க் கண்ணனை
ஆர ணன்றனைத் தருமரு ளாளனை
யடியருக் கெளியனைப்
பூர ணன்றனைப் போற்றுவார் சித்தரிற்
பொலிவுறும் புண்ணியரே. (அ0)

வேறு

பொலியுநன் முட்டம்வாழ் பூவ ராகனை
எலிமையா லெயிறிடை வியற்று மீரனை
அலியுமா னுமமெனு மல்ல லாகிய
ஒலிகடல் வண்ணனை யுளகொ ளுள்ளமே. (அக)

உள்ளமே முட்டம்வா ழுழுதி மாயனைக்
கள்ளமே யவர்க்குஞ்செய் கருணை யான்றனைப்
பள்ளமேய் கொக்கின்வாய் பகிர்ந்த வன்றனை
வெள்ளமே யவனையென் வினைக ணீங்குமே. (அஉ)

நீங்கும்வல் வினைமக கிகழு முட்டம்வாழ்
தாங்குசக் கிரிதனைச் சகம ளக்கமுன்
ஓங்குநற் பரமனை யுள்ளு மன்பரைப்
பாங்குடன் பதமலர் பணிந்து போற்றவே. (அங)

போற்றரு முட்டம்வாழ் புனித மாதவ
காற்றனல் புனல்நிலங் காய மாகிய
ஆற்றலம் மாயசெய் யருளை டைந்தனன்
ஊற்றமோ பெயனின் னுயர்ப தத்தையே. (அச)

உயர்வற வுயர்நல முடைய வுத்தமன்
அயர்வறு மமரர்க ளதிபன் முட்டமார்
பெயர்வற மண்கொள்பற் பிறைகி டிப்பிரான்
மயர்வறு மாட்சிமை வழங்குற் பாலதே. (அரு)

வழங்குநான் மறைபுகழ் வரத கேசவ
முழங்குவாச் சியமரு முட்ட மாதவ
தழங்குசக் கரந்திகழ் தடக்கை நாரண
பழங்கணோய் தவிர்த்தெனைப் பாலித் தாள்வையே.

வையமுண் டாலிலை மகவெ னத்துயில்
ஐயமுட் டத்துள்வா ழழக வைவர்தந்
தையலுக் குடைமிகத் தந்த வைம்படைக்
கையவெற் குனகழற் காத லீதியே. (அஎ)

காதல்செய் யடியவர் கருத்த கல்கிலா
மாதவ முட்டம்வாழ் மதனு முட்கிடும்
ஓதநீர் வண்ணபச் சோந்தி மன்னெனப்
பூதலத் தருள்பர புரத்தி யென்னையே. (அஅ)

புரந்தருள் காமுகன் பொய்ய னென்னைநீ
உரந்தரு முட்டம் வாழொருவ வொப்பிலா
வரந்தரு நாரண வாயசத் தொரு
சிரந்தரு கருணைகூர் தேவ தேவனே. (அகூ)

தேவரு மனஞ்செயுஞ் செல்வ மோங்கிய
மாவரு முட்டம்வாழ் வராக தற்பர
மேவரு வீடருள் வேத நாயக
ஓவரு மென்பிறப் பொழிவித் தாள்வையே. (கூ0)

வேறு.

ஒழித்து வாசனை யொடுபுறப் பற்றெலா முலகைப்
பழித்துப் பொய்யழுக் காறறப் பாற்றியாங் காரம்
அழித்து முட்டமா ரரிதிரு வடிகளிற் பத்தி
செழித்து நிற்குஞ்சீ ரியரம ரரினுஞ்சீ ரியரே. (கூக)

சீர்ம லிந்தசீ முட்டமார் திருவினுக் கரசே
தார்ம லிந்தநற் றண்டுழா யணிந்தநற் பரமே
பார்ம லிந்தவொப் பற்றமா பாவியா னெனினும்
ஏர்ம லிந்தநின் னருட்கிலக் காக்கியா ளெனையே. ()

என்பெரும்பிழையெழுதொணாதிசைக்கவுமொண்ணா
துன்பெருங்கருணையிற்பொறுத்தூழ்வினையொழிப்பா
யின்பு றுந்தம ரேத்தசீ முட்டமேய்ந் திலகும்
அன்பு றுந்தமி ழாரணம் புகழ்திரு வரசே. (கூ௩)

திருப்பொ லிந்தநின் செழுமலர் முளரிச்சே வடிகள்
[ருள்வாய்
கருப்பொ லிந்தயா னடைந்துயக் கடைக்கணித்
மருப்பொ லிந்தபூம் பொழில்வளர்முட்டமாநகர்வாழ்
உருப்பொ லிந்தமா மலர்மக ளுறைதரு முரத்தோய்.

ஓய்ந்தெ னூழ்வினை யுலகினி லுய்யுமா றருள்வாய்
ஆய்ந்த வந்தண ரமர்திரு முட்டம்வா ழழகா
ஏய்ந்த வன்பர்தம் மிதயம்வா ழிறைவனே பரவை
காய்ந்த கால்வில்லி ராமனே கருணையங் கடலே. (கூரு)

கடந்த ஞானிபோற் காட்டுவ னடித்துல கறிய
அடர்ந்த பத்தியெற் கற்பமு மில்லையாள் வாயோ
படந்த னைப்பெறு நாகமே படுத்தமா தவபார்
இடந்த வேனமா மிறைவசி முட்டம்வா ழெந்தாய்.()

தாயுந் தந்தையுந் தானுமே னையுந்தனக் கென்றும்
ஆயுங் காற்றுணை யன்றுநற் றஞ்சமா யறியாத்
தாயுந் தந்தையுந் தானுமற் றனைத்துமாந் தகவோர்
வாயு முட்டமா தவன்பத மடைவது வலமே. (கஎ)

வல்ல மாமுநி வார்புகழ் முட்டமா நகர்வாழ்
நல்ல மாமறை நவிற்றுமே னத்துரு நாதா
அல்ல லார்ந்தவ டாதன வனுதினம் புரிந்த
புல்லன்யானையி ழைபொறுத் தவந்தெனைப்புரந் தருளே

அருள்பு ரிந்துநின் னடியர்தம் மடியர்க்காட் படுத்திப்
பொருள் புரிநதெனைப் புரந்தருள் புயன்மணி வண்ணா
உருள்பு ரிந்தவச் சகடத்தை யுதைத்ததா ளுடையாய்
தெருளபு ரிநதசி முட்டமார் தெய்வத்துக் கரசே (கக)

தெய்வத் தாக்கர செழிற்றிரு முட்டமவாழ் செல்வன்
ஐவ ணத்தடி மிசையழ கியமண வாளன்
உய்வ ணத்துரைந் திட்டபா மாலையிஃ துரைப்பார்
செய்வினைதனைந் தெய்துவர் வைகுந்தத் திருவே.(உ)

திருமுட்டப்பதிற்றுப்பத்தந்தாதி
முற்றுப்பெற்றது.

---

தேவதேவஸ்ரீபூவராகபாப்ரஹ்மணேநம:
ஸ்ரீமதேவராயபரமதயாகுரவேநம:

| பக்கம் | வரி | சீர்பிரிவு |
|---|---|---|
| 14 | 7 | ராகன்ம |
| ஷை | 18 | ஆவ லாகப்பிச் சையையேற் |
| ஷை | 20 | சீவ ராகந யிருரு |
| ஷை | 21 | சேர்ந்தங்கி |
| ஷை | 22 | யாவும்ப |
| ஷை | 23 | |
| 15 | 2 | றும்பல்க |
| ஷை | 3 | நெஞ்சந்த |
| ஷை | 4 | ஞான முஞ்ச |
| ஷை | 6 | னெற்குனன ருமேணர்ப |
| 16 | 10 | கத்திற்றி |
| ஷை | 15 | காட்சித்தி |
| ஷை | 16 | வீணிற்க |
| ஷை | 17 | சாசைசக |
| 17 | 1 | டர்ந்தம |
| ஷை | 2 | தாக்கத்த |
| ஷை | 3 | டர்ந்தம |
| ஷை | 5 | டர்ந்தசி |
| 24 | 18 | பூவரா கப்பரனைக் |

## பிழைதிருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 14 | 18 | பிச்சை | பிச்சையை |
| 15 | 12 | னப்படை | னப்பாடை |
| | 16 | டத்தவற் சிந்தை செய் | டத்தர சைச்சிந்தித் |
| 20 | 3 | வாகச் செற்ற | வடர்த்த வீச |
| | 4 | வேத | மேனத |

உ

திருச்செந்தூர்

# சுப்பிரமணியசுவாமிபேரில்

# மாலையந்தாதி

இஃது

திருநெல்வேலி ஜில்லா

செல்லயம்பலம்மாசித்துக்குடிமுனிசீப்

## மா-ா-ா தனுக்கோடி முதலியா

ரவர்களால்இயற்றியது

திருநெல்வேலி முத்தமிழ்பாகர அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது ௲அ௱௬௰௭ ஜூன்மீ 1867

உ

சிவமயம

இஃது

# சாத்துக்கவிகள்,

பேரையூர்சமஸ்தானவித்வான்
இலிங்கையரவர்களியற்றியது

ஓலையந்தாதி யென்றுடுமயூர முகைக்குமது *
வேலையந்தாதிரு க்கைவேலையா வென்று வேண்டிநித *
மாலையந்தாதிவர் சோலையுஞ்சூழ்செந்திலாதிபன்மேன் *
மாலையந்தாதி சொன்னான் றனுக்கோடிமகாமன்னனே *

இஃது

# திருநெல்வேலி

யிலிருக்கும்

வித்வான்

## அழகியசொக்கநாதபிள்ளை

இயற்றியது

தனுககோடிமாலுண்ட வையந்தொடாமலுந்தண சநமபா ❋
தனுக்கோடிமாலுடல கண்ணுயிரங்கொளத்தான்செய்மனம ❋
தனுககோடிமாலுறலையாமலுஙகுகன்ருள்பெறவுந ❋
தனுக்கோடிமாலுளைசெய்தானிம்மாலையந்தாதியையே ❋

எமரனநதாதி யஞ்சாயுதன் செய்மருகேசவென்றுந் ❋
தமரனநதாதிரு வாழ்ககையுந்தாவென த்தநதிடலகண் ❋
டமரனந்தாதின் கமலத்தனை சசமனைத்தவிர்ப்பான ❋
குமரனந்தாதி த்தமிழ்பாடினன்றனுககோடிமுன்னே ❋

குமரன்றுணை.

# மாலையந்தாதி

விநாயகர்காப்பு

வெண்பா

செந்தாமரையடிமேசெந்தூர்ச்செவ்வேண்மாலை
யந்தாதிதன்னையறையவே கந்தாதி
மாலையணிவேழமுகமறபுயன்றன்பொற்பதமெக
காலையினுமாலையி ழுங்காப்

கலித்துறை

சீர்நிறைந்தோங்குதிருச்செந்திலாவுன்றிருவடிமே
லோர்கவிமாலையந்தாதி சொன்னேனின்னுறுப்பெனுமப
பார்மகனேனைகிரகங்களிஷடபலன்கொடுக்க
வாரணிவோன்சுதனேநல்குவாய்நின்னருளெனக்கே (௧)

அருளபுரிவா ருனையலலா துவேறெனக்கார புவியின் *
மருளனுகா துவரமருளவாயமணமேமிகுத்த *
சுருளகொடுத்தநதமயிலாகும்வள்ளியைத்தோயுமறைப *
பொருளுனையன்றியுண்டோசெந்திலாவன்பர்போற்றுதற்கே ௨)

போற்றுவ நன்னடிபோற்றுமவவானந்தமபோலுலகிற *
சாற்றுவதற்கொரு நாலுளதோவுடலசாந்தவினை *
மாற்றுவதற்கென்சிரமீதிலுன்றன்மலரடியை *
யேற்றுமபடிக்குவரந்தாசெந்தாரிலிருப்பவனே ௩

இருப்பவனீ முனளிருந்தவனீயிதையெண்ணில்வெள்ளிப *
பொருப்பதில்வாழும்பொருவளீயெனவுன்னிப்போற்றிலனென *
விருப்பதுபோலவிமமண்மிசைவாழநதத்தின்மேலினமோர் *
கருப்பதியாதருள்வாயோதிருசசெந்திற்காரணனே (௪)

காரணனேசநகாதிபர்தேடியுங்காண்பரிய
பூரணனேயெனக்கேயிரங்காயம்புவியையுண்ட
நாரணனான்முகனஞ்சிடசசூரைநமனுககிட்டே
யாரணமார்த்திடசசெநதினிலவநதவென்றனடவனே ✻ ✻ ✻ ரு)

ஆண்டவனேநின்னடிமையுநானெனவாகியுமப
பாண்டவாபோலவும்வாடனன்றேபண்டுகுஞசரித்தாய
வேண்டமகிழநததிருசசெநதிலாயவெவ்வினைகளறக
கீண்டடியேனையும்வாழவிககவேண்டுங்கிருபைசெயயே ✻ ✻ ✻ சு)

செய்வாய்கொடியமனமாயையறறுததினமுமனைக
கைவாய்புதைத்துப்பணிநதிடவேகடமபாசெநதிலாய
மைவார்குழன்மடமாதாபிதற்றுமயக்கமறப்
பெயவாயுனதருளென்மீதிலேயன்பர்பேசுதறகே ✻ ✻ ✻ எ)

பேசவருன்புகழ்நின்னடியாரிளமபெண்கணமருண்
டேசுவதைப்புருடார்த்தமென்பேனிரப்போர்கரங்கிக்
காசுதுக்காணியுமீயாதிருந்தகயவனென்றன்
மாசுதொலைந்திடமாசெந்திலாயநலவரமருளே ௮

வரந்தாவகிலம்புரந்தாயுனதுமலரடியென்
சிரந்தாவுன்மேற்கவிசெப்பவுந்தாசிந்தையேகலங்கா
வுரந்தாபுவியுற்றசெல்வமுந்தாவுலகேழளந்த
பரந்தாமன்வேண்டுந்திருச்செந்தில்வாழ்குகபட்டணவனே ௯

பண்ணவனேநின்னடிபணியாவென்பவமொழிய
வெண்ணுவையோகதியேதுமுண்டோவெளியேனகத்தி
னண்ணுவையோபுவியெல்லாமதிக்குநலமளித்தென
புண்ணுடைநெஞ்சினையாற்றுவையோசெந்திற்புண்ணியனே ௰

புண்ணியபாவங்களென்றுதகன்மப்புலையர்கடங்
கண்ணினிலியான்விழிக்காதருள்வாய் கஞசன்மாலபரவத
திண்ணியசூருடல் கீண்டாயடிமைஜெனனமற
நுண்ணிடைவளளிமகிழ்செந்திலாயன்புநோக்குவையே (மி௧)

நோககமரிவையாமேலாகி க்காமத்தினொந்துபுண்ணா
யேக்கமுறறேனுக்கிரஙகுவையோ வெளியேனுக்கென்று
மாக்கமுதவுநின்றெழுதகோர்ந்தந்தகனுக்கஞசா
வூக்கமெனக்கருளசெய்வாயதிருசசெந்திலுத்தமனே (மி௨)

உத்தமனேயுனக்கொப்புயாவாயொருதெய்வமுண்டோ
சுத்தமனத்துடையாரகம்வாழுஞசுகவடிவே
சித்தமுனதடி த்யானத்துள்ளாக்குஞசெயலுதவுங்
கத்தனுநீயல்லவோ செந்திலாயென்றன் கண்மணியே (மி௩)

மாலையந்தாதி

கண்ணிற்சிறந்தகருமணியென்றுன்கழல்பணிவோர்
விண்ணிற்சிறந்தமணியாயெக்காலும் விளங்குவரால
பெண்ணிற்சிறந்தபெருமாட்டிவள்ளியின்பெட்புகந்தாய
மண்ணிற்பிறந்திறவாவரந்தாசெந்தில்வாழ்கந்தனே (மச)

கந்தாவுனதுதிருவடிதன்னை க்கருத்தில்வைத்தே
யெந்தாயிரங்கிடுவாயெனப்போற்றி யிறைஞ்சினர்க்கு
நந்தாதசெல்வமுகந்தளித்தாயுனை நம்புமென்மன
வந்தாதரவுடனாண்டுகொள்வாய்செந்திலவாழ்குகனே (மரு)

குகனேசடானனனேயையனே யெனக்கொருசியரன்
மகனேயெனுமனம்வந்துநின்றாய் தொன்மறைகளறு
முகனேசகத்துக்குக்காரணனென்று மொழிந்திடுஞ்சிற்
சுகனேதிருச்செந்திலாயிநின் சூக்ஷத்தைசசொல்லெனக்கே (மகூ)

எனக்கேபிறையவனீயறிவேறிலேபேதமிலா *
வுனக்கேயடிமைமகள்வேணதுணடென்னையொறுத்த ரு *
கனகேசபாரககரும்பாகியவளளிகாதலமே *
மனக்கேதநீக்கிடுவாயசெந்திலவாழமறைமெ ழுந்தே (யஎ)

கொழுந்தேயருட்கனிக்கொம்பேயெனவன்பாகவுருகு *
செழுந்தேனைப்பாலைத்தெவிட்டாதவானந்தத்தெள்ளமுதைத் *
தொழுந்தோறுமின்பமபுதிதாக்குவானைபிததொலலுலகி *
லழுந்தாதுகாக்குநஞ்செந்தூரமெ பர்களன்பர்களே (யஅ)

பேபெருகிமனமேயுருகியழுதழுது *
என்பேநெக் ாகவுருகிடுவோாகளிதயமதிற *
றுன்பேதுநலவி யேதுகொல்லோ சுகவாரியிலா *
ழின்பேகொடுத்திடுவாய்செந்தில்வாழமிருநிதியே (யகூ)

நிதியேபடைத்தவராறுநின்னடிநேயம்வைத்துன் ※
றுதியேசெயாதிருந்தோர்கணின்னன்பர்முன்றேன்றுவரோன் ※
மதியேயிலாரென்றிகழுடைவாரிந்தமண்ணிலென்றன் ※
விதியேதெனவறியேன்கைவிடேல்செந்திலவேலவனே (உ0)

வேலுடையாய்வள்ளிமாலுடையாயன்பர்வேண்டு தண் ஏடக் ※
காலுடையாயென்கருத்துடையாயண்டங்காததிடுஞ்செங ※
கோலுடையாயெனைக்கொண்டுடையாயபுகழ்கூறுமறை ※
நாலுடையாயஙகமாறுடையாய்செந்திறையகமே (உக)

நாயகியம்மைப்பிராமிகுண்டலிநான்மறைகளுந ※
தாயகிபோலுற்றவன்மயிடாசுரன்றன்னைசெற்றன் ※
பாயகிலாண்டமுமீன்றுளையந்தப்பராசக்தியென்று ※
வாயகம்பேசுவரோசெந்திலாயருள்வாக்கெனக்கே (உஉ)

வாக்குமனமுமொன்றுயலயமாயுன்மலரடியை *
நோக்குந்திறலதுவேநிட்டையாங்கற்பமோரொடிய *
தாக்குமுனதடியார்க்கடியேனைத்தறைக்கணிதச் *
சேக்கையிலாரல்வழியிலென்செயுஞ்செந்திற்சின்மயனே (உரு)

சின்மயனேபிரசகந்தனிலுள்ளவெசசென்மங்களு *
நின்மயமேயன்றிவேறில்லையென்னுநிலைபுணர்ந்து *
நன்மயமானசடாக்ஷரநிஷ்டையைநாடிலவர் *
தன்மயமாவரொன்றேசெந்திலாய்மறைசாற்றிடுமே (உசு)

சாற்றிடுநல்வழிதானுணரேனுனைச்சற்றுமுன்னேன் *
போற்றிடுவான்மலருன்னடிமேலிட்டுபூசிக்கிலே *
னூற்றிடுமைபுளியாய்க்கரைந்தேன்றுயரியாவுமுக்ர *
காற்றிடும்பனுசெனவாக்கிடுவாய்செந்திற்கற்பகமே (உஎ)

கற்பகக்காவுற்றவிண்ணவர்கோன்பெற்றகண்மணியை
யற்புதமாய்ச்சேந்திலாதிப நீமணந்தானபின்னர்
வெற்புறும்வேடர்குலமாதைசசேர்ந்தவிபரமென்றே
தற்பரனேயிதையேது சொல்லானசசது முகனே * * * உசு

முகமேநிறைமதிமாமலரொன்றந்தமோய்குழலா
ரகமேகளிக்கப்புகழ்ந்தபின்னன்னவராற்றிடைக்குரு
சுகமேநிலையென்றிருந்தேனந்தோவததுயர்தொலைப்பா
யுகமேமுடியினுநந்தாதசெந்திலுருமணியே * * * (உஎ)

மணியேமணிவிளக்கேசெந்திலாயெனவாழ்த்தியுன்றன
பணியேபெரிதெனபபத்திசெய்வோரைப்பரவியிவிப்
பிணியேதுமற்றுன்னருணட்டமுற்றும்பெருமைதரா
வணியேயணிக்கணியேமயிலேறுமரும்பொருளே * * * (உஅ)

அரும்பொருளேயெனதாருயிரோநின்னடியிணையே
பெரும்பவநீந்தும்புணையெனவெண்ணிலன்பேருலகந்
தரும்பலனன்மையதாய்க்கொடுப்பாயினித்தாயவயிற்றில்
வரும்படிநீவைத்திடேல்செந்தில்வாழுமறைமுதலே ௯௯

மறையவர்போற்றிடசசெந்தினில்வந்தவெண்வாழ்முதலே
யிறையவனேயென்றுனைத்துதித்தேனெளியேனுக்கிந்தத்
தறையவர்கண்டிடவொன்றைவெல்லுந்தகைமைபுநன்
னிறைபுகழ்ச்செல்வமருள்வாயசீருநிலைநிற்கவே ௱

செந்திலாதிபன்மேல்மாலையந்தாதிமுற்றிற்று.

குமரன்துணை

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



திருவானைக்காப்

# பதிற்றுப்பத்தந்தாதி.

சென்னை

தொண்டைமண்டலம் ஐஸ்கூல் ப்ரின்ஸிபல்

கூத்தூர் - வி - சுப்பையர் M. A., L. T.,

அவர்களியற்றியது.



இஃது

மஹாவித்வான் - புரசை

அஷ்டாவதானம் - சபாபதிமுதலியாரவர்கள்

மாணாக்கரும்

மேற்படி கல்விசாலைத்

தமிழ்த்தலைமைப்பண்டிதருமாகிய

திருமழிசை

வீரசிவமாசனமடம்

ஸ்ரீலஸ்ரீ - சாந்தலிங்கஸ்வாமிகளாதீனம்

வித்வான் - சிவப்பிரகாசையரவர்களால்

பார்வையிடப்பட்டு

சென்னை

பண்டித மித்திர யந்திர சாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.



1904ஞ் ஜூலை 30௳

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருவானைக்காப்

# பதிற்றுப்பத்தந்தாதி.

சென்னை.

தொண்டைமண்டலம் ஐஸ்கூல் ப்ரின்ஸிபல்

கூத்தூர் - வி - சுப்பையர் M, A. L, T.

அவர்களியற்றியது.

இஃது,

மஹாவித்வான் - புரசை

அஷ்டாவதானம் - சபாபதிமுதலியாரவர்கள்

மாணாக்கரும்

மேற்படி கல்விச்சாலைத்

தமிழ்த்தலைமைப்பண்டிதருமாகிய

திருமழிசை

வீரசிம்மாசனமடம்

ஸ்ரீலஸ்ரீ - சாந்தலிங்கஸ்வாமிகளாதீனம்

வித்வான் - சிவப்பிரகாசையரவர்களால்

பார்வையிடப்பட்டு

சென்னை

பண்டித மித்திர யந்திர சாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1904௵ ஜூலைமீ 30௳

# சாற்றுக்கவிகள்.



## வித்வான் - காஞ்சீபுரம் - இராமசாமிநாயுடு

### அவர்களியற்றியது,

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

திருவளரு மைம்பூதத் தொருபூதத் தலத்திலுறை சிவ
பிரான்றன், மருவளருஞ் செங்கமல மலர்புரையுந் திருவடிக்
கண் மாட்சி மேய, குருவளரும் பதிற்றுப்பத் தந்தாதிச்
சொன்மாலை குலவச் சூட்டி, உருவளரும் புடவிமிசை யுயர்
சீர்த்தி யுற்றானணி யொளிர்வுற் றானே. (க)

அன்னவன்யா ரெனிற்றொண்டை மண்டலத்துத் துளு
வவே ளாளர்பேரான், மன்னலுறும் போதகசாலையிற்பிரின்
சிபாலெனுமுத் யோகம் வாய்ந்தோன், தன்னனைய நயசுகு
ணன் றமிழ்க்கடலை யெளிதிலுண்ட தளரா நாவோர், முன்
னவனென் றேயுலகி லேவருமேத் தெடுக்கமிகு முதுசீருள்
ளோன், (உ)

சிவனடியார்க் காணிலந்தச் சிவனென்றே கருதியவர்ச்
சிறக்கப் பூசித், தவனமையின் றைப்பிறவி யறுக்கமுயல் வோ
னெனறு மாசு தீர்ந்த, புவனமதி லிரவலர்க்கோர் புகலிடமா
யிருப்பவன்மெய்ப் போத முற்றோன், தவங்யக்கூத் தூர்வா
ழும வேங்கடரா மையர்தரு தநய னென்போன். (ங)

ஆங்கிலபா ஷையிலுமுய ரற்புதமா நற்கவிஞ ராவனெ
ன்று, வாங்குதிரைக் கடலுலக ருரைத்திடுஞ்சான் சன்மில்
டன் வருஷேக்ஸ் பியர், ஓங்குபுகழ்க் கோல்டிஸ்மித் தென
வெவரு முரைக்குமுரை யுற்றோன் சால்பு, தேங்குறு சீர்ச்
சுப்பையனெனுநாமம் பூண்டென்றுந் திகழ்வோன் யாதோ,



### சேந்தோம்காலேஜ் தமிழ்ப்பண்டிதர்,

## நயினை - சண்முகம்பிள்ளையவர்களியற்றியது.

விண்ணோர்க்கு மவிடமாட நிறைவோர்க்குங் கூத்தாரின்
மேவியோர்க்கும், பண்ணோர்க்கு முறையோர்க்கு நாவோர்க்
குஞ் சிறப்புடைய பனுவ லாயோன், கண்ணோர்க்கு மணியனை
யான் சுப்பைய நாவலவன் தகைமையோர்க்கும், பெண்ணோர்க்
கும் பங்கனுக்குப் பதிற்றுப்பத் தந்தாதி பேசினனால்,

## அஷ்டாவதானம்.
## பூவை - கலியாணசுந்தரமுதலியாரவர்கள்
### இயற்றியது.

கற்றுப்பத் தந்தாதி வருநீனோர் தனமதரங் கன்னங் கண்கள், பெற்றுப்பத் தந்தாதி யிமிர்நல்லார் நடநாளும் பெயருங் காவை, யுற்றுப்பத் தந்தாதிக் குயரலங் காரசுவை யோங்க வோர்ப, திற்றுப்பத் தந்தாதி கூத்தூர்சுப் பையக கவிஞன் றெரித்திட் டானால்.

## புரசை - அஷ்டாவதானம் - சபாபதிமுதலியாரவர்கள், மாணாக்கரிலொருவரும்
## சென்னைச்சர்வகலாசங்கத்துத் தலைமைப் பரிட்சகர்களி லொருவருமாகிய,
## தண்டலம் - பாலசுந்தரமுதலியாரவர்கள்
### இயற்றியவை.

மும்மறையு ணடுமறையி னந்தமறைக் குயிரெனவே மொழியா நிற்கும், எம்மையுடை யானமலை பங்குடையா னினிதுவீற் றிருக்குஞ் சோணாட், டம்மையுமிம் மையுமுதவும் பலதளிக டமிலழகார் காவைக்கண்ணோன், செம்மைமலி யந்தாதி யின்மையினந் தாதியொன்று செப்பி னானால்.

இனையனியா ரெனினறைதுஞ் சகோதரவானு சையுமன்பு மென்று மேய்ந்தோன், புனைதருசீ ராங்கிலத்திற் சதுரனெனக் கூறுமெழிற் புலமை மிக்கோன், தனைநிகராந் தொண்டைமண் டலகலா சாலைக்குத் தலைமை மன்னும், வினையமுறும் நயப்போத காசிரியன் சுப்பைய மேதக்கோனே. உ.

அவனுரைத்த வந்தாதி கேட்டவழிச் செவியினுக்கு முடைவி னேதச், சிவையினிக்கு நினைப்போர்கண் மனமினிக்கு மென்பராற் சில்லோ ரீண்டு, சுவையொன்பா னொடு பத்திச் சுவைசொட்டும் பான்மையினாற் றொடுநீர் வைப்பில், உவமையிலா வமுதென்கோ தேனென்கோ யாதென்கோ யானைப்ப லம்மா!

சிவஞ்சத்தி தனைப்பிரியா தொருசத்தி சிவம்பிரியா தென்றுசெப்பும், தவஞ்செறியு மான்றோர்சொற் கியையவிறையுமையுருவந் தானே கொண்டும், நவம்பொருந்து மிறையுருவ முமைகொண்டும் வீற்றிருக்கு நல்மே மேவும்,பவந்தணக்குங் காவைமகிழ் பரம்பொருளே யிவந்தாக்கும் பரிவின் மாதோ,

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.

இஃது

மஹாவித்வான் - புரசை

அஷ்டாவதானம் - சபாபதிமுதலியாரவர்கள்

மாணாக்கருளொருவரும்

சென்னை, தொண்டைமண்டலம் ஹைஸ்கூல்

தமிழ்த் தலைமைப்பண்டிதருமாகிய

திருமழிசை

வீரசிம்மாசனமடம்

ஸ்ரீலஸ்ரீ - சாந்தலிங்கசுவாமிகளாதீனம்

வித்வான் - சிவப்பிரகாசையரவர்கள்

இயற்றியது.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சொல்லேறு திருத்தொண்டத் தொகையேறு மெய்யடியார் தொகுப்பி னுற்பா, னில்லேறு மும்மையின ரினி தேறு மேன்மையுறீஇ யிருநீர்ப் பொன்னிப், பல்லேறு சார லேறிப் பாய்ந்தேறுங் கமலமலர்ப் பணைசூ லாவிச், செல் லேறு பொழிற்புவியான் சிரமேறு மகுடமெனத் திகழ் சோ ணாட்டுள். (க)

மறைமுழக்கு மறையவரம் மறைநவின்மா மனுநெறி செய் மகமு ழக்குந், தறைமுழக்குந் திகழவியூண் டருமு ழக்கும் பெறுமுழக்குந் தருக்கி னுண்ணு, மூறைமுழக்கும் வானவர்கண் மணமலர்தூ யாசிபுரி முழக்கு மோவா, நறை முழக்கும் வயற்றிருவா னைக்காவின் மேவுமர னற்றாட் கன் பின். (உ)

வானோங்கு தருநினங்கள் வளனோங்கு மஞ்சிறைய வணைடர் மாந்தத், தானோங்கு நறைவழங்காத் தகையோங்கு நவையொருவித் தம்போ லென்றுந், தேனோங்கு வகைதேற றுந் திறத்தோங்கல் போனிவந்து தேறல் வாக்கும், கானோ ங்கு வயற்றஞ்சைக் கடுத்தோங்குங் கூத்தூரிற் கவினுற் றோ ங்கும். (௩)

மன்னுமறை யவருளோர் மறைமுறையோன் வாதரா
யணப்பேர் மேய,தன்னிகர்கோத் திரனுபத் தப்பசூத் திரந்
தொழுகுந் தகைமை பூண்டோன், பன்னுசிவ சித்தாந்தப்
பற்றுறும காலிங்கப் பனவ னீன்ற,கன்னனிகர் வேங்கடரா
மையனெழிற் றவச்சுதனைங் கணைவே ளன்னான். (௪)

தோன்றிடினற் புகழோடு தோன்றுகெனச் சொற்ற
தமிழ்ச் சுருதிக் கேற்ப, வான்றவட கலையொடுதென் கலை
மட்டோ பலர்புகழு மாங்கி லத்து, மேன்றசம்பூ ரணனெ
னுஞ்சொற் கியைந்தபொருள் வாய்ந்திலகும் எம் - ஏ - பட்
டஞ், சான்றதிற லரசாங்கத் தவர்நல்கப் பெற்றிலகுந் தனி
ச்சீ ருற்றோன். (௫)

சங்கியற்றண் பணைச்சென்னைத் தொண்டைமண் டல
கலா சாலை தன்னிற், றங்குமுதன் மைப்போத காசிரியத்
தகைமருவிச் சற்சங் கங்க, ளெங்கெங்கும் பிரசங்க மினி
தாற்றி யெவரெவரு மின்பிற் பொற்பூ, விங்குமணை முறில
தனை யேய்க்குமிவன் சீரெனவே யிசைப்ப நின்றோன். (௬)

புண்ணியநன் னீறக்க மணிவடமைந் தெழுத்திவையே
பொருளாக் கொண்டோன், திண்ணியனுஞ் சிவசரணர் த
மைச்சிவமாய் மதித்தொழுகுந் திறத்தின் மிக்கோன், மண்
ணியலும் புகழ்க்காந்தி மதிச்சரிதந் தமிழ்மொழியின் வரை
ந்த மாண்பன், தண்ணியநன் மாணவர்க டனைநிகர்ப்பப்
போதிக்குஞ் சக்தி யுற்றோன். (௭)

பன்னருமிப் புகழ்பரவு சுப்பைய நாவலனிப் பாரின்
மேவி, மன்னுதமிழ்ப் புலவர்மன மகிழ்ந்துசிரந் துளக்கியிறு
மாந்து நிற்பப், பொன்னகரப் புலவர்பெறு தேயாப்ப விரு
சுவையும் பொலிவி னோங்கத், துன்னரும்பத் தழகுநவ
ரசமுமலங் காரமுமே துதைந்து மல்க. (௮)

தலமலிதண் டமிழ்விருத்த யாப்பதனாற் பல்வேறு சந்
தமேய, நலமலியும் பதிற்றுப்பத் தந்தாதி யொன்றியற்றி
நன்க ணிந்தே, வலமலியிவ் வுடற்கொடுறு பெரும்பேறு
நனிவாய்ந்து வண்க ணுற்றும், புலமலியவ் வச்சியற்றிப் பற்பல
ர்க்கு முதவிமிகு புகழுற் றானால். (௯)

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவானைக்காப்

# பதிற்றுப்பத்தந்தாதி.

---

## விநாயகர் துதி.

### நேரிசைவெண்பா.

நந்தார் வயற்றிருவா னைக்காப் பதிற்றுப்பத்
தந்தாதி சொல்ல வருளும்பாற்—சிந்தார்
பணபதிமா லீசனயன் பண்டேத்து மாதிக்
கணபதிமா தண்டைக் கழல்.

---

## சமயாசாரியஸ்தவம்.

---

### எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

வடமொழியிற் றென்மொழியே வலிமைத் தாய
வகைகாட்ட மறைக்காட்டம் மறையான் மூடுந்
தடமணிக்கோ புரக்கதவத் தாடி றப்பச்
சாத்தப்பைந் தமிழ்ப்பதிகஞ் சாற்றி னார்சீட்
படமணிபாப் பணிப்பரமன் றேறு மன்பிற்
பரவுமொரு புலியுநெடும் பாம்பு மேத்தத்
திடமணி யம்பலநடத்தன் கரத்தாற் றீட்டைந்
திணைக்கொண்டு சொற்றவன்றன் சிரமேற் கொள்வாம்.

---

உ

இயற்றமிழ்ப்
போதகாசிரியர்வணக்கம்.

---

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

---

திருவமலி பொழில்சுலவுந் திரிசிரபு ரத்தினிலெண்
டிசையோர் போற்றும்
பொருவரிய சர்வகலா சங்கத்திற் றமிழ்த்தலைமைப்
புலமை வாய்ந்தோன்
மருவெளியேற் கொண்டமிழி லக்கியவி லக்கணத்தின்
மாண்பு தேற்றும்
பருவமுகி லனையமுத்துச் சிதம்பரநா வலன்புகழைப்
பரவு வாமால்.

---

## நூல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

---

கார்கொண்ட கடற்பருகுங் கடமுநிகைக் கமண்டலத்திற்
கவிழ்ந்து ற்றூர்ந்த
நீர்கொண்ட வொருநதியே யிருநதியா வகந்தழுவ
நிலவா னைக்காப்
பேர்கொண்ட பெருநகரி லகிலாண்ட வல்லிதொழப்
பெரிது மேவுஞ்
சீர்கொண்ட வரன்சரணைச் சிந்திப்போர் வினையனைத்துஞ்
சிந்திப் போமால்

சிந்திக்க வரம்புரூந் திருவானைக் காவடிக
டனமு நெஞ்சே
வந்திக்க மலர்க்கரமும் வாழ்த்துபுகழ் தமிழ்வாக்கும்
வணங்க மெய்யும்

பந்திக்கத் தலையன்பும் பரிந்தளித்து மவன்மலர்த்தாட்
பரவா தந்தோ
திந்திக்க வுடற்குழைக்கு நின்செய்கை விழற்கிறைத்த
நீர தன்றே. (௨)

நீரோங்கு மடவரலை நிதஞ்சுமப்போ னௌலறத்தன்
னிலைமைநீளப்
பாரோங்கு மழுதேசப் பதியினிலந் நீருருவாய்ப்
பயிலுங் கொன்றைத்
தாரோங்கு நெடுஞ்சடிலத் தற்பரனின் பொற்பமர்செந்
தாட்டுணைக்கே
சீரோங்கு திருத்தொண்டின் றிறனோங்க வருள்கவினை
தீர்தற் கின்றே. (௩)

தீர்த்தவடி வுற்றிலகுந் தீர்த்தனே செவ்வியநூற்
சிலம்பி முன்ன
ரார்த்தசெழு மணிக்கோயி லமுதேசப் பெருமானே
யடியா ருள்ளச்
சேர்த்தவிசின் மேவியருள் சிற்பரனே யுனைப்பரவுஞ்
சிறிய னேனைப்
போர்த்தமல மிரித்தமலப் புனைகமலப் பதநிழலிற்
புகுவிப் பாயே (௪)

ஆயமறை யந்தமளந் தளந்தறியா வமலதிரு
வானைக் காவின்
மேயவனைப் பரவிமழுஞ் சிலந்தியுமா யிவற்றொன்று
மேலை நற்பே
றேயமற்றொன் றிச்சகவாழ் வெய்தவரு ளியதென்சொ
லெவ்வுயிர்க்குந்
தாயனையா யுள்ளன்பிலாவெளியே னுணர்ந்துவினை
தணக்கு மாறே (௫)

தணக்குருமைந் தனைக்கிழவன் றனைச்சினவும் விகடவிழித்
தழற்கொ டென்றன்

கண்க்கருவெம் மலவிருட்கட் டறச்சினவி யின்சரண
கமல நீழன்
மணக்குறுமா றருள்புரிக கோச்செங்க ணன்முன்னர்
வணங்கிப் போற்ற
வெணற்கருநின் பதமுத்தி யீந்தொளிர்வெண் ணாவனிழ
லிருக்குந் தேவே. (௬)

தேவர்மணி முடியிடறுன் றிருவடிப்பேற் றினைவிழைபிச்
சிறியே னென்று
மூவர்திரு நெறித்தமிழும் முழுமணிவா சகன்முறையு
முறையிற் றேரே
னாவலிற்கண் மணிநீறு மணியகிலே லைந்தெழுத்தி
னடைவுந் தேரே
னாவலடி யமர்ந்தருளு நாயகனே யெங்ஙனதை
நண்ணு கேனே. (௭)

நண்ணரும்பிப் பிறவிவிடி னனுருவதெப் பிறவிகொலோ
நாயி னேற்கென்
றெண்ணியினை தருட்கிடனும் வகையுளற்று திளமானி
னெழிலேக் கன்ன
கண்ணியர்த மிடையகரங் கவின்றிலகுங் கல்வியினிற்
களிப்புற் றேற்கும்
புண்ணியர்க டொழுமுணடிப் போதருள்க பிரமேசப்
பொருவி லீசயே. (௮)

பொருதுறமேோர் முனிவனுகர்ந் துமிழ்ந்தரப்புற் பலரொன்பிற்
புரள்வா னாற்றி
னொருமுனிக்குங் கமண்டலமின் றெழுமியரன்பூ சனைக்குதவி
யுயரும் பொன்னி
மருவுதிரு வானைக்கா வாணவுனைக் கோதுமன்போன்
மயலுற் றேத்தா
திருவினை [illegible]
இரங்க [illegible] (௯)

நன்றுமய னிருமிக்கக் கண்டகிடுட் படிந்தாழ்ந்து
நற்பொன் னிக்க
ணின்றெழுவி மானத்து நின்மலனே யயன்மாலு
நேடிக் காணு
வுன்றன்மரை மலரடிப்பே றுள்ளன்பி லாவெளியே
னுறுமா றெங்ஙன
னென்றணவும் பொழிற்சலவு மெழிலிலகு ஞானதலத்
திருக்குங் கோவே. (௧0)

எழுசீர்க்கழி நெடி லாசிரிய விருத்தம்.

இருக்காதி வேத முடிமீது மன்ப
ரிதயால யத்து முலவா
பெருக்காவை மேவு முநிமேனி வந்த
பெருநாவ லத்து மிளிரா
திருக்காலெ ணாது சிரமே லிலங்கு
திறனனி லத்து றுவனே
லொருக்காலு மாலு மயனாரு மென்று
முனும்வாழ் வுறப்பெ றுவனே. (௧௧)

பெறவேவி ரும்பு வரமென்று நின்றுட்
பெரும்புண்ட ரீக மிதயத்
துறவேவி ழைந்து நிதமுன் றனிச்சீ
ருவந்தன்பி னோடு சிரமேன்
மறவாதி ரண்டு கரமோலி கொண்டு
வணங்காவெ னாது வினைவே
றறவேய ருள்க சிறையாரும் வண்ட
ரமரும் வெணாவன் மணியே (௧௨)

மணியாய் மணிக்கு ளொளியாய் மலர்க்குண்
மணமா யுரைக்கு ளுணர்வாய்
குணியாய் குணிக்க வரிதா குலித்த
கொலையார் மழுப்ப டையினேய்
பணிஞ டுமத்த வொருவா வைமுத்த
பதினா வமெய்க் குருவாய்

அணியார் விடைக்கொ டியுனே மறைக்கு
மரியாய் தவத்த ரமுதே (௧௫)

தவஞான மீகை யருளோ டடக்கந்
தயை சாந்த மேது மிலனாய்
யவமேகு லாவு மகமே தருக்கி
யடியே னுயா தழிவனோ
சிவமேவி சாக சனகா மதர்த்த
சிறியேனை யாண்ட ருள்வையோ
பவமேவி ராய நெடுமால் பழிச்சு
பவனே வெணாவ லமுதே. (௧௬)

அமுதேச ஞான தலவாச தும்பி
யகிலாண்ட வல்லி யயன்மால்
குமுதேசன் பானு முனிகோத மன்வன்
குறுமாத வத்தன் முதலாஞ்
சமுதாய மான தவரால் வணங்கு
தலைவாமி குத்த வவரன்
பிமியேனு மின்றி யிறுமாந் திருக்கு
மெளியேனு முய்ய வருளே. (௧௭)

அருளேது மின்றி யன்பேது மின்றி
யறமேது மின்றி யறிவின்
தெருளேது மின்றி செந்தாளி றைஞ்சு
திறமேது மின்றி மகளிர்
மருளேது வன்றி மனமே கவன்று
வளர்வேனு முன்ற னுயரன்
பருளே யடைந்து னடியே வணங்க
வருள்வாய் வெணாவ னிலையே. (௧௮)

நிலையாத வாழ்வு நிலையாத நாடி
நிதமே யலைந்து திரிவேன்
கலைமாறு சீத மதிசூடி நீடு
கவினார் குடந்தை யரனே
யலையாரு ஞால மிசையேழை யேனு

மருளாடு கின்ற துளதோ
தொலையாத சீர்மை மலிகாவை மேவு
சுடரே வெளுவலநூசே. (கள)

அரைசேர் தரக்கி னதளும் புழைக்கை
யதளும் பணங்கொ ளரவுந்
திரைசேர் கடற்க ரளமும் வழுத்திச்
செறியுங் கொடுங்க ளலதும்
பரைசே ருடற்கண் பயின்மற் றனைத்தும்
பணுபுண் ணியங்க ளிதெனு
விரைசே ரறற்றண் டலவிங்கி சைக்கின்
விழைவே னவைக் கெளியனே. (கஅ)

எளியேனி னது திருமேனி பூப்ப
வெழுநீறு மக்க மணியு
மொளியேவி ராய புவிமீதி லேற்றிங்
குலவாவு டற்பி ணியையுங்
களியேற லுதிப் பவப்பிணியு மோச்சுங்
கண்டப்பாடு முன்னி ஞானத்
தளியேவி ளங்கு பவவாண் டருள்க
சரணத் தடுத்த வெனையே. (கக)

எனக்கும்மெ னக்கு ளிறையா முனக்கு
மிடையாம் வினைக்கு முளவாம்
பனைக்குந்தி னைக்கு முளவாய பேதப்
பகுப்போர்கி லாக்க யவனேன்
றனக்கிங்க னைத்துந் தெரித்தே மணத்த
சரணீவ தென்று புகலாய்
வணக்குங்கு மத்தன் டடமார்பி னுண்முன்
வருகாவை மேவு பொருளே. (உ0)

எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

வேறு

பொழிசுவைக் கனியே பூசனை புரிந்த
புழைக்கையும் மதப்பெருப் பிறுக்கே

## திருவானைக்காப் பதிற்றுப்பத்தந்தாதி.

கழிபெருங் கமலக்கழலிணை யருளிக்
ககனவான் முகட்டினைக் கருளுஞ்
செழிதரு சினைவெண் ணாவலின் மூலச்
செல்வமே சிறியனே னுறுந்துயம்
பழிதபுத் தருள்க பலவெனக் கிளைத்துப்
பரவுமா மறைமுதற் பொருளே. (உக)

பொருளுடை யவர்க்கப் பொருளினை யுதவல்
புண்ணிய மன்றெனு லோர்ந்துந்
தெருளுடை யுடைக்கே திருவருட் புரிதல்
சிறப்பதோ திருவெண் ணளித்தீண்
டருளுற வமைத்த வணியெயிற் காவை
யகிலநா யகிதொழுந் தேவே
மருளுறு மடியேற் குனதருள் வழங்கன்
மாண்பதோ மதித்துத வுகவே. (உஉ)

உதவுவா ருதவும் பொருளினில் வெறுப்பு
முன்கழல் பழிச்சுனர் கமலப்
பதயுக ளத்திற் படுந்துக ளதனிற்
பயிறரு விருப்புமீண் டெளியேற்
குதவுறி லஃதென் றனக்குமா லறியா
வுன்பத மளிக்குமான் மணிசெய்
கதவுறு கோயிற் காவையம் பரம
கருத்தமின் கருத்தறி கிலனே. (உங)

அறிவரு மறையே யம்மறைப் பொருளே
யாகமாந் தத்துவந் தெளிவே
மறிமழு வேந்து மருவளர் மரைக்கை
வள்ளலே மதுகர மார்க்கப்
பறிதரு கொன்றை மலர்மலி சடிலப்
பண்ணவ நண்ணுறுங் காவைச்
செறிவுறு பிறைநேர் மின்னுழக் கடிமை
செய்வருள் செவ்வனெப் பொழுதே. (உச)

தேவரு மறியாச் சிவபராஞ் சுடரே
    சிருட்டியர் தியமுறை பயின்ற
மூவரு மறியா முதல்வனே மூவர்
    மொழிதமிழ்ச் சுவையுணர் முடிவே
சேவரு முனைஅ திருவருட் படிவச்
    சேவையைக் காவையுட் கண்டேன்
றுவறு மெளியே னுளத்தினை யல்லாற்
    சகத்திய லேதுங்காண் கிலனே. (உ௫)

காண்டொரு முன்னைக் கனிதரும் பெரியேன்
    கருத்தறிந் துதவுநின் மறிப்பா
ரீண்டெவ ரிளஞ்சேய்க் கறிக்கவாய்ச் சென்று
    ளெவருனை மறித்தல ரெந்தாய்
சேண்டவழ் சோலைக் காவையங் கோயிற்
    றெய்வமா ணத்தொளிர் விளக்கே
வேணுதல் வேண்டா மையிலா யதனால்
    விழைந்தவை விழைந்தவா றருளே. (உ௬ ,

அருந்தமி ழாரூர்க் கவிஞனோ டளவி
    லடியவர்க் கிரந்திடு சோற்று
விருந்தினை யுகவேன் பூந்தராய் வாழ்ந
    ஞிஞன்மண நாளள விலர்க்குந்
கருந்திரு மணத்துச். சோற்றினை விழைபித்
    தமியனேற் கருள்செய லென்றோ
கருந்தட நெடுங்கட் கௌரிமு னேத்துங்
    காவைவாழ் தருபெருந் தகையே. (உ௭)

தகைப்பரு மாயா தகஞ்செய்தண் டிசன்
    றனைநிக ரன்பில னேனு
மிகைப்புரி யவன்றன் றந்தைபோல் வன்பின்
    மிகுதரு மறிவிலேன் றனக்குந்
திகைப்பற நோக்கித் திருவருள் புரிதல்
    செவ்விதே யாமுவந் தருள்க
புகைப்புல னுறுத்த முனிவர்க்குங் காவைப்
    பதியமர் திலகுமா பதியே. (உ௮)

பதித்தக மூன்றான் பரவுனர்க் கருளும்
பரமனென் றருமறை பலவும்
விதிப்பவுங் காட்டாய் வேடுவர் கோமான்
விளங்கவும் வீசிதிரைப் பொன்னி
நதிப்பெரும் புனல்சூழ் நாவலி னடிக்க
ணண்ணியொண் ணதிருமுடி மிலைந்த
பதிப்பொரு ளெனுநின் பதமலர்க் கன்பு
படைத்தில னுய்வதெப் படியே. (உ௯)

படியளந் தவனும் பங்கயத் தயனும்
பரமியா மென்றுவாத் தருக்கி
னடிமுடி யறியா தகழ்ந்துயர்ந் தெய்ப்ப
வழலுரு வாயவெப் பறவோ
துடியிடை மடவா டுதிப்பநீ ருருவாய்த்
துன்னிய தறிகிலேன் காவைக்
கடியவிழ் கடுக்கைத் தாமவென் மனத்தீக்
கட்டறுத் தாண்டரு ளுவந்தே. (௩௦)

கலிவிருத்தம்.

வந்த னங்கள் வளரு மரைமலர்க்
கந்த மல்குங் கயஞ்செறி காவையுள்
வந்தி றைஞ்சிமுன் வாரணம் பெற்றபே
றெந்த நாளெளி யேற்கெய்து மீசனே. (௩௧)

ஈச னேசுர ரேத்தெழிற் காவையுள்
வாச னேமற்றை வாழ்த்திப் பரவுறாஉந்
தேச னேநின் றிருப்பதஞ் சிந்திக்கும்
நேச னேற்கருள் வாய்சிவ நிட்டையே. (௩௨)

நிட்டை யுற்ற நிலைச்சித்த னாகிநீ
றிட்ட மைத்த வெயிலெழிற் காவுளா
யட்ட சித்திமு னுற்றிய துண்மையே
விட்ட சித்தி யெனக்கரு ளெந்தையே. (௩௩)

எந்தை நின்கழற் கும்மினி தேத்துறாஉ
மந்த மேவு மகிழ்ந்திட வல்லிக்குஞ்

சந்த மாலை தமிழினிற் சாற்றுநற்
சிந்தை தந்து தினந்தொழச் செய்கவே. (௩௪)

வைய மூர்தர வாழ்வதி லென்பய
னைய னேகயா ரண்ணியத் தண்ணலே
மெய்ய னேயுன் விரைமலர்த் தாடொழச்
செய்ய வேகட னிச்சிறி யேனையே. (௩

சிறிய னென்பிழை சித்தத் தடக்கியைம்
பொறிய வித்துனைப் போற்றுநர் நாடுநன்
னெறிய ளித்தெனை நித்தமுங் காத்தரு
ணறிய பூம்பொழி ஞான தலத்தனே. (௩௬)

தலங்க ளொன்றிற் சலத்தல நாதனே
சிலந்தி முன்னருச் சிக்கமன் னாக்கிய
நலங்கண் டென்னரு ணண்ணைப் பரவுமென்
மலங்க ளொந்தெனை வாழ்விக்க வேண்டுமே. (௩௭)

வேண்டு நின்னடித் தொண்டும் விழைகுநர்க்
கீண்டொன் றில்லென் றிடாவகை யீதலு
மீண்டி வண்பிற வாமெய்ப் பதவியுங்
காண்ட குஞ்சீர்க் கயாரணி யத்தனே. (௩௮)

அத்த நின்கழற் கன்புடை யாரெலாம்
பத்தி யோடுனைப் பாடலு ணர்ந்திழி
பித்த னேனும் பிதற்றுரை கேட்டரு
ணத்து லாம்வய லைவற் பதியனே (௩௯)

பதிய தாகினைப் பாடவு நான்மறை
மதியி லாமன் மறந்தவெற் கிங்கருள்
வதியு மாலயன் மற்றுள தேவருங்
கதிபெ றப்பணி காவையுள் வாசனே. (௪௰)

அறுசீர்க்கழி நெடி லாசிரிய விருத்தம்.

வாசந் தருகற் பகவாசன்
மருவும் பிரமச் சாயையற
நேசம் பெறவற் பொடுமூழ்கு
நிரைவண் டலர்நற் றடமூழ்கிப்

பாசந் தெறவுந் றியல்வேலுன்
பதிவாண் கமலத் தார்வேலனே
தேசம் பரவத் திகழ்காவைச்
செழுமா நகரத் தமர்வானே. (௪௧)

வானு ரனை நான் மண்ணீரான்
மாமதி யென்றா மெண்வகையு
மானு யலரா னன்னீரி
னுடையை யம்ட ன் றொடுமெம்பின்
மானுர் மயலா னைந்தாழ்வேன்
மால திரிந்துன் வரியளியார்
தேனுர் மலர்மாண் செந்தாளிற்
சேர்தர லென்றமு தப்பரனே. (௪௨)

பரனே பரமார்த் தம்விளவும்
பதியே நிதியே படர்கங்கா
தரனே வியனுர் விண்டருவின்
றகைதேர் பொழிலார் தருகாவை
யரனே யலர்பா தம்விழையு
மவர்தா மறியாரோ முன்சந்
திரனே படியூர வம்புனலின்
செழுநீர்த் திவலைப் பெருமையையே. (௪௩)

மையார் கண்டத் திறையோனே
மலையான் மணக்கு மணவாளா
வையா வுன்ற னருளுறுதற்
கறமேன் றவமே னருச்சனையே
னெய்யா திங்கக் கதிரவன்மு
னெனியே முழுகத் தடமூழ்கி
மொய்யார் பொழிற்கா வைமருவும்
முதல்வா வெனிலோ பெறலாமே. ௪௪)

பெறுதற் கரிய பெரும்பேறும்
பெறுவார் பிறவித் தளையறவா
தெறுபற் பலது யரமாறச்
சிவமாம் பெருமைச் செறிதருவார்

தறுகட் களிறு துதிஞான
　　தலனார் சரணஞ் சரணமெனக்
குறுநற் படிவத் தொருமுனிமூழ்
　　குறுநீர் முழுகி யாடுநரே. (சரு)

ஆடிற் காவை யயோத்தியர்கோ
　　னறலாற் கொலைபா தகமறுவீர்
நாடிவெ ளைரா வதமிவர்வீர்
　　நான்முக னாகி யனமிவர்வீர்
தேடிக் கலுழன் மீதூர்வீர்
　　தீயவு லுத்தர் மீதுகவி
பாடிப் பாடி யுழல்வீரெம்
　　பரனா ரருளும் பெறுவீரே. (சசா)

ஈர்ந்தண் புனலான் ஞானதலத்
　　திலகுஞ் சம்புப் புனன்மூழ்கிற்
சேர்ந்தண் மிகுபா தகமேகுஞ்
　　சிவமார் முத்தி நிலைகூடுங்
கூர்ந்தீ தறியாக் கொள்கையெனே
　　கோதா வரிசிந் தலைகங்கை
யார்ந்த யமுனை யென்றுனியாங்
　　கலைந்தே யுழலு மவரவரே. (சஎ)

அவனே யவளங் கதுவாகி
　　யமைந்த மாயாப் பிரபஞ்ச
மெவையு நீயே யாயிலக
　　வெளியேன் புறம்பிங் காவேனோ
நுவமார் காவைப் பெருமானே
　　நல்கா யெளியேற் கெழுநாவான்
கவலா நிலைநீக் கியநீரோர்
　　காலுற் றுடொ ருவரமே. (சஅ)

ஒருவா தணைமா ருதரத்தி
　　லூற்றுப் பவமார் பிறவியற

வருளா லெளியே னோர்ஞான்
　　றறிந்தே னஃதீங் கருள்செய்வாய்
மருவார் பணிகோச் செங்கண்ணன்
　　வணங்கு ஞான தலத்தாருந்
தெருளா ருமையா டியசீமத்
　　தீர்த்தத் தன்பான் மூழ்குதலே. (௪௯)

குதலைப் பயிலோர் மதலைமுனுட்
　　கொளும்பாற் கடலும் வெண்டிரைவீ
சுதலைப் பெறுவா னதிமுதலேழ்
　　தூநதி யுங்கவுண் மதமார்தும்
பிதலைய தன்பிற் பணிகாவைப்
　　பிறங்கொன் பான்றீர்த் தமுநல்கு
முதலைப் பலன்யா வையுமொருவர்
　　மூழ்கத் தருஞ்சிவ கங்கையதே. (௫௦)

அறுசீர்க்கழி நெடி லாசிரிய விருத்தம்.

கங்கைவெண் மதிநற் றும்பை கடுக்கையுஞ் சிரத்தி லங்கப்
செங்கையொண் டழன்மான் சூலந் திகழம ருகமுந் தங்கப்
பங்குறு முமையா ளோடும் பரிந்திட பத்தி லூர்ந்தே
யிங்குவந் தருளக் காவை யீசனை வணங்காய் நெஞ்சே. (௫௧)

நெஞ்சகத் தன்பி லார்நூ னெறிமுறை யாற்றும் பூசை
நஞ்சென வெறுத்து ளன்பி னற்கலாற் புடைக்கும் பூசை
யெஞ்சலின் மகிழ்விற் கொள்ளு மீசனே காவை மேவுஞ்
செஞ்சடைப் பெரும நல்குன் றிருவடி வணங்கு மாறே. (௫௨

மாறனுக் கருளுஞ் செம்பொன் மலைப்பொருள் விரும்ப கில்லே
னேறெனப் புவியை யாண்டுடன் றிருந்திட விரும்ப கில்லே
வீறணி சுவர்க்கத் தார்தம் விழைநலம் விரும்பே னின்றுட்
சோறதே விழைவே னல்க வடர்மதிற் காவை வாழ்வே. (௫௩

வாழ்த்தினர் வாழ்த்த யானே வஞ்சமிகப் புரிவ னேனுந்
தாழ்த்தினைப் பித்த னென்னுஞ் சாற்றுமத் தன்மை தேர்
சூழ்த்தறு காற்புள் ளுநஞ் சோலையுங் காவை நாத [வே
பாழ்த்தவென் பிறப்ப றுக்குன் பதந்தரத் தகுதி யானே.(

நாளும்வெண் ணீறுபூசி நயனநன் மணியும் பூண்டு
நீளுகல் லாடை போர்த்து நினதடி யவரி னஞ்சாக்
கோளுறு வஞ்ச வேடங் கொண்டிழி தொழிற்செய் வேனுன்
றாளுற லென்றோ ஞானத் தலத்துறை தருமெம் மானே. ௫௫

மானன விழியார் மையல் வலைப்படிந் தவர டித்தொண்
டானவை புரிவே னுன்ற னடியர்தொண் டியற்ற லில்லே
னீனமா ரெளியே னின்னுன் னிணையடி நினைவுற் றோவா
மோனமார் திருக்கை யென்றோ மொழியரு தேசத்தேவே. ()

தேவர்தம் வாழ்க்கை முற்றுந் திரும்பவும் பிறவிக் கேதென்
றோவயி னவைவெ றுத்து னலரடி விழைந்து நின்றேன்
பாவணி படரைச் சோதிப் பவனிலை யென்றிங் கோர்ந்தே
யாவலி னனைந்தேன் காவை யமுதநின் குறிப்பிங் கென்னோ. (௫௭)

குறிப்பறிந் தருளா யேனுங் குன்றுயிரந் தழலு ழக்கந்
திறப்படப் புரியு மெற்குன் றிருவருள் சுரவா தென்னே
விறப்பவு மிரப்பார்க் கில்லை யென்பவ ரீனை ரொன்று
முறையபொரு ளுணர்ந்த காவை முழுங்கருட் படிவக்கோவே. ()

கோடியாம் வெறுக்கை நேடிக் கோதையர் மக்க ளின்ப
கீடின ரெனினு நின்று ணிலையறிந் தேத்தா ரன்றோ
நாடியற் சினைய நாவ லுதவொண் ணிதிய முற்றும்
வீடின ராகி மேலை வீரிந காட்சி பூண்டோர். (௫௯)

பூண்பல பூண்டு மெய்யிற் பொற்படாம் போர்த்து நாளுங்
காண்பல மாதர் மெச்சக் காளையாய்த் திரிவே னல்லாற்
சேண்பயி லுவன் மூலச் சிவபராஞ் சுடரே நின்றுண்
மாண்பொடு பணித்துன் கோயில் வலம்வர முயல்கி லேனே. (௬௦)

எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

முயன்றன்பிற் பரவடியார்க் கெளிய னென்று
முழங்குமறை புண்டரீயர் நீதி யாரன்
பியன்றிடுதட் பேறின்றிட் டோரு னைத்தட்
டெளிமையிற்று ழுறவொழர்த்துன் முட்க ணெண்பு

குயின்றனனின் குறிப்பறியேன் குறிக்கொ ளாவெண்
    குணக்குன்றே ஞானதலக் கோவே யென்பாற்
பயின்றுளவைம் பாசமறுத் தருட்க டைக்கண்
    பார்த்தருணின் பதம்பெறவிப் பாரின் மீதே. (௬௧)

பாராதி யண்டபகி ரண்ட முற்றும்
    பரந்தெனைத்துந் தானாய பரனே மெய்ம்மைச்
சீராரு மணிமயவி மானத் தோங்குஞ்
    சிற்பரனே சேதியர்கோ னன்பிங் கோர்ந்தும்
போராரும் வஞ்சகன்கைப் படவிட் டாற்போல்
    போற்றுமெனைக் கைவிடா தெனைப்ப கைக்கு
நேராரைத் தவிர்த்தெளியேற் கருள்க நின்று
    ணிழன்மருவிச் சிவானந்த நீடு மாறே. (௬௨)

ஆறேறு மணிமுடிகொ ளரனே நாவ
    லடியமரும் பெருமானே யடர்க்கும் வீரப்
பாறேறு மேறேறும் பரனே கொன்றைப்
    பைந்தருநின் னுருக்காட்டப் பரவா னயன்
வீறேறு மன்பினில்யா னொருகூ றெய்த
    விழைந்தருளி லென்பாற்கூற் றுவன்மே வாமற்
பேறேறு மொருசிறுவன் பான்முன் போந்து
    பெற்றவுதைத் தழும்புடலிற் பிறங்க லானே. (௬௩)

பிறங்குமுளத் தன்பினெடும் பரவி நின்றாட்
    பேறுபெறு மதமாவாய்ப் பிறக்கி லேன்மஞ்
சுறங்குசிகைக் குன்றெனவந் தெதிர்த்த வஞ்ச
    வும்பலெனப் பிறக்கினுநின் னுருக்க ளார்வன்
கறங்குதிரைக் கடலகட்டிவ் விருவ கைத்தாங்
    காரியக்கு மிடமிலனா யுழல்வே னென்றுந்
திறங்குலவு மலரடிக்காட் படுவ தெந்தாய்
    தென்காவைப் பதியமருந் தேவ தேவே. (௬௪)

தேவர்கோ னுளற் றகொடுஞ் செயத் புத்தா
    டிருவருட்பாங் கறிந்துனடிக் கடிமை பூண்டேற்

பூவருபங் கயன்கரத்தும் பங்க யன்றன்
புதல்வன்றன் கரத்துமினிப் புகிலிப் பூவி
லேவருக்கும் பெருநகைப்பிற் கிடமன் றோவவ்
வெண்மையெவர் பாற்றெனநன் கெண்ணி யேனுஞ்
சேவருநின் றாள்பெறுமா றருள்வாய் காவைச்
செழுநகரி னமர்ந்திலகுஞ் சிவபி ரானே (சுரு)

சிவமயமிவ் வகிலசரா சரம தென்னத்
தேரேனும் புலநெறிச்செல் லகம டக்குந்
தவமிலேன் குருமுதன்முப் பொருளோர் கில்லேன்
றனதுவாந் தன்மையொரு சிறிது மோரேன்
உவர்மேனி யீரங்கொல் லியனைக் கண்டன்
றுன்னடிய னெனப்பரவு மடிச்சே ரன்பக்
குவமிலே னருட்பெறுமா றென்னே காவைக்
குருமணிமா னத்தமருங் குணப்பொற் குன்றே. (சுசு)

குன்றெடுத்தொண் ணிலாபுரந்தோன் விழிபெ யர்த்துன்
கோகனகத் தாட்கணியக் குலவு மாழி
யன்றுதவு வண்மைமையக்கண் டின்ற டுத்தேற்
கன்பினருட் செயாதெனகி லாண்ட வல்லி
யொன்றினளோர் பான்மற்றோர் பான்மா னின்று
னுன்றனக்கே திடமென்பா லில்லை யென்னி
லென்றெனக்காப் பொய்ம்மொழியேன் சராச ரங்க
ளெல்லாநின் வயிறெடுங்கு மியல்கண் டேனே. (சுஎ)

கண்டெழிற்காஞ் சியிலன்பும் பொருளு நேர்ந்து
காடவர்தங் கோமானு நின்றை யூரி
லெண்டகுபா வனையொன்றாற் பூச லாரு
மெடுத்தசிவா லயங்கடமி னினைத்தா பிக்கக்
கொண்டசுப நாளொன்றாக் கூடப் பின்னாட்
கொள்கெனக்கா டவர்க்குநவில் குறிப்பிங் கோரிற்
றிண்டிறல்சே ரந்நெறிகொண் டுய்வேன் காவைச்
சிலந்திநாற் றனியவது தேர்கி லேனே. (சுஅ)

தேர்ந்தகய வாயரவ வாய வாய்மூன்
றென்றுமித்திங் கயமருளாற் சித்திக் கப்பெற்

றார்ந்தவலி யான்பெயரு நின்றாட் பேறு
மங்குறவு மையறிவோ டொன்றை யோருங்
கூர்ந்தபகுத் தறிவுமுறு மொருபே ரியாக்கை
கொண்டுமுனைப் பரவகிலாக் கொடியே னின்றாட்
சார்ந்துசுகா தீதநிலை மருவ லெங்ஙன்
றவஞான தலத்தமுதே சாற்று வாயே. (சுகூ)

சாற்றும லொருநால்வர்க் கன்றா லின்கீழ்ச்
சாற்றியகைக் காட்டறியேன் றமிழ்வே தத்தி
னாற்றாரு மெழினால்வ ரிரண்டற் றொன்றா
யுற்றிலகு மத்துவித முத்தி தேரே
னேற்றார்நின் சந்தான மரபுற் றோங்கு
மெழிற்குரவ ரார்ந்தநல மீதென் றோரேன்
கூற்றார்ந்த வுமைபரவக் காவை மேவுங்
குழைகழற்றா ணிழலெவணங் குறுகுவேனே. (எ0)

எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

கூட கன்ற புள்ளொ னாக்கு லாவு மெய்யி னுயிர்நிலை
நாட கன்ற வொள்ள றிவி னாவி னேனு மளிமுர
லேட கன்ற வண்க ழற்க ணேயு மாறெனு காவிரி
யூட கன்ற நற்ற லிக்க ணோங்கி வாழு மீசனே. (எக)

ஈச னேசு ரேச னேத்து மிறைவ னேவெண் ணாவல்வாழ்
நேச னேநற் றீப தார்த்த நிலையி தாமென் றோர்கிலாப்
பாச னேனும் பாச மும்ப ரித்தி யாக மாய்விசு
வாச நேசம் வாய்ந்து னைவ ணங்கு மாறு செய்கவே. (எஉ)

செயற்க ருஞ்செ யற்ப ரிந்து செய்வ ரற்பெ ரியரென்
னியற்ப ரூஉக்கை மாவு ரித்தெ டுத்த வாற்ற றேற்றவுங்
கயற்க ணார்ம யற்ப டிந்தோர் காணா நின்க ழற்றொழே
னுயற்கெ னக்கொர் வுகைய ணிக்க வுற்ற காவை யத்தனே.
அத்த னிப்பி றப்பில் யானி னடிகள் தாணு மருவிலே
னொத்த வேத நாவன் மன்னி னுயர்வெ ணாவன் முயலகன்
பைத்த மேனி பரவை வாயிற் படியெ னப்பி றக்கிலென்
ளத்த னையு முயல்வி லாது னடியி ணைக்கண் டுய்வனே. (எச)

உய்ய வுண்ட நஞ்ச மின்று ணர்த்த நின்ன ருட்டிறம்
பொய்யி கந்த திற்றெ ழூர்து போர்கு மூழ்ப்பு ணர்ப்பினுன்
மெய்ய கன்று மாண்டு மாண்டு மீண்டி வண்பி றக்குறாஉம்
வெய்ய வான வர்ப்ப ராவும் வீணென் ரசொல் பெறுவரே.(எ௫)

பெற்ற மாய மாயன் முன்பி றங்க லாய்ப்பி றங்குநாள்
சற்று நோக்கு ருவ டிக்கண் டன்க ணிட்ட வாறுபற்
றற்ற வர்க்க ருள்வன் கர்லவ யண்ண லென்று ணர்த்தவும்
மற்றொர் பற்றி னேனும் வாழ்த்துய் வாழ்த்தி லென்ப யப்பதே.

பற்றி லார்க்க ருள்வ னுவற் பதிய னென்னு மறைமொழி
வெற்றெ றாவு ணர்ந்த னன்வி ளங்கு நாவ லூரனுக்
கொற்ற னுயு வந்து தூது ரைத்தி யைத்த வுண்மையா
லிற்றை நாளு னேவ லாக வெனையி யக்கிற் சாலுமே.(எஎ)

சால நீள்வ யற்சு லாவு சம்பு கேச வெங்கணும்
பாலி னீரின் விரவி நின்னின் பரிசு காண்கை யொன்றுமற்
றுலி சூழ்பு விக்க வென்னை யான றிந்தி ருத்தலொன்
றேலி ரண்டி லொன்றை யாது மெய்த லிங்க ளருள்வே. (எஅ)

அருமறைக்கு லஞ்சொல் காவை யாத்த தூல சூக்குமக்
கருவி யென்னு மும்மை யாக்கை யிற்ப டிந்தும் படிவிலா
தொருவில் கால மூன்றி னின்று முறைய கக்கு ருதவென்
னுருவை யானு முணரு மாறிங் குனத ருட்பு ரிகவே. (எகூ)

புரியு நின்ன டித்தொ ழூம்பு பூண்ட வென்முன் வெற்புநே
ரெரிவி ழிக்க ரும்ப கட்டி னியமன் வந்தெ திர்ந்தநா [ன்
ளரிவி டைக்க ளூர்ந்த வண்வந் தருள்சு ரத்தல் வேண்டினே
விரிம லர்ப்பொ தும்பர் மேய வெள்ளை நாவல் வள்ளலே. ()

கலிவிருத்தம்.

வுள்ளமலர் வாவிமத வாரண வனத்தோ
ரொள்ளிடையு ளன்பினடி யேத்தினர்க ளன்றே
விள்ளரும்மெய்ஞ் ஞானநிலை மேவியவு ணர்கைப்
புள்ளின்வழி சென்றுசிவ போகநுகர் வாரே. (அக)

ஆரமல ராரணனி யார்மனைவி யாரஞ்
சோரவலை கித்திலது துன்னுமின் முடிக்க
ணாரலெவன் காவைநக ரார்ந்தவு னடிக்கீழ்ச்
சாரவரு ணல்குகத யாவினெளி யற்கே. (அ௨)

எட்டுணைய வேனுமிர வாவகையு மேற்பார்க்
கிட்டுநகர் தேட்டமுமி லங்கடியர் தொண்டு
முட்டுதையு மன்பினொடு முன்புகழ்ந வில்சொற்
கட்டுமிக நல்குகக யாரணிய வாழ்வே. (அ௩)

வாரணவ னத்தவிர்வ னத்துருவ வெந்தா
யாரணமெ னைத்துமகி லாண்டமும்விராய
பூரணனெ னுஞ்சொலுறு போதமது ணர்ந்துங்
காரணமெ னுவலகர் கண்டுபர வற்கே. (அ௪)

பரசமய மேவு மவர் பாரிலளி மூசும்
சுரசமய நாவனிழ றுன்னுபுவு லாதைக்
கரசமய நல்குமமு தேசனரு ளோரில்
வரசமய சைவதவ வாழ்வையிக வாரே. (அ௫)

இகமிலகு தீயவுட லீரவெனி னெஞ்ச
மிகமறுகு முன்னருறு மேல்வினையி னந்தோ
வகமய லகன்றுனடி யார்ந்தருண்மெய்ஞ் ஞானச்
சுகமருவு மாறருள்க தோயவுரு வோனே. (அ௬)

உருவமொரு நான்கருவ நான்குபய மொன்றாய்
மருவுநவ மார்வடிவ மன்னியும னுதும்
பொருவில்பொரு ளாய்நிறைபு னற்படிவ நாத
குருவடிவ மேவியொரு கூற்றருள்வ தென்றே. (அ௭)

என்றுபணிந் தேத்துமமு தேசபடர் கோட்டுக்
குன்றுறழ்ப கட்டினிவர் கூற்றனெனை மேவி
லன்றுவிடை யேறியெனை யாளுமுமை யாளோ
டொன்றுற வெதிர்ந்தருள்க வுள்ளுமெளி யற்கே. ()

உள்ளியிடு கந்தமென வோதுமய லோவா
தெள்ளிநுவி னைக்குளுழல் வீரிவது செங்கட்

கிள்ளியிடு மாலயனி லாலயநின் வெண்ணீ
றள்ளியிட வவ்வினைய கன்றொளிர்கு வீரே. (அகூ)

ஒள்ளொளியெ னுவெளிய னுள்ளமலர் மேய
வெள்ளியந னுவலடி மேவமுத வள்ளால்
தெள்ளுசிவ ஞானநிலை தேறவிழை வேனுக்
குள்ளநெறி யுள்ளபடி யுள்ளுற வுணர்த்தே. (கூ0)

## எழுசீர்க்கழிநெடி லாசிரிய விருத்தம்.

உறுபெரு நாரமோடு பிறைநீடு கொன்றை
யொளிரிண்டை மோலி சரணம்
மறுவறு வேதமோலை மொடுநாடு கஞ்ச
மலராந நேச சரணம்
இறுதிகொண் மாலயன்றன் சிரமாலை கொண்ட
வெழிலாரு மார்ப சரணம்
நறுமலர் நாவனீழ லமுதேச மால்க
ணணிமல்கு பாத சரணம். (கூக)

சரவச ரங்களாய பிரபஞ்ச முற்றுந்
தாணு மனாதி சரணம்
கரவச மேயசம்பு முனிநல்கு நாவல்
கனியுண்ட வண்ட சரணம்
பரவச நார்த்தநன்மா பழிநீக்கு காவை
பரநாத தத்வ சரணம்
உரவச னத்தகோத மன்விரக தாப
மொழிவித்த நம்ப சரணம், (கூஉ)

நம்பகி லாண்ட வல்லி கொளமுன் னவிற்று
ஞானோப தேச சரணம்
கம்பலை நீடுகங்கை யிலுங்கா விரிக்குக்
கனநல்கு நாத சரணம்
பும்பெழு சாகரங்க டிசைநான்கு மல்கி
பரவப் புலிங்க சரணம்
வம்பவிழ் மேருவாவி நதியாகு மாறு
வரநல்கு மப்ப சரணம், (கூங)

அப்பிறை பாரியாடோ ளணைவன்னி சாப
மகல்வித்த தேவ சரணம்
ஒப்பறு நேரியானில் லவள் சூடுமார
மொளிருத்த மாங்க சரணம்
செப்புச ரோருகன்ஸ்ரீ வினைநீக்கி யாக்குந்
திறநல்கு மூர்த்தி சரணம்
மைப்புரு கூதனைத்த வடர்பிரம பாவ
மாற்றும்ப ரும்ப சரணம் (௬௪)

உம்பல்செய் பூசையேற்றன் றுவந்தாண்டு கொண்ட
வுயர்ஞான தேச சரணம்
பைம்புன ஙீடியோடு பொருணைக்கண் முத்தம்
பாலித்த வீச சரணம்
அம்புயை யாடரங்க நெடுமால் வணங்க
வருள்கருணை வாரி சரணம்
நம்புறு பானுபோற்ற வொளியாதி நல்கு
நறுநாவன் மூல சரணம். (௬௫)

சந்திரன் வாழ்த்திமாமன் றருசாப மாற
சரண்புக்க சரண சரணம்
சுந்தர நாகமேவு மயன்செய்வி மானத்
தொடர்புற்ற வாதி சரணம்
வந்தர நாதமோடு பணிவிட ணற்கு
வரநல்கு மமுத சரணம்
முந்தர ஞரினேமி சமனுக கும்ப
முநிபரவு மொருவ சரணம் (௬௬)

பரவியி ராவணேசன் றனைவீட்டி ராமன்
பழிநீக்கு மிறைவ சரணம்
விரவியு லூரைதவாயி னுறுதந்தி னுற்று
வியன்கோயின் மேய சரணம்
திரவிய மின்றிநீற்றி னெயில்கட்டுவித்த
சித்தப்பிர சித்த சரணம்

உரவிய நீர்த்தலைவீப்பென் றுயர்தீர்த்த முற்று
    மொளிர்தீர்த்த மேனி சரணம். (௯௭)

திருமலர் வாசனுற்றுச் சவங்கொண் டுவந்த
    சிவஞான தான சரணம்
மருவுப ராசரன்றன் வழிபாடு கண்டு
    வஃதீந்த வரத சரணம்
நிருதிப ராவிபச்சாத் தாபேச னென்ன
    நிறுவித்த வெந்தை சரணம்
வருமொரு வீடணன்வற் சரந்தோ றிறைஞ்ச
    வளர்தோய நாத சரணம். (௯௮)

வடதிசை மன்னவன்புட் பகநாடி யேத்த
    வரமீந்த நித்த சரணம்
படருபு நந்திகேட்ப நகர்மேன்மை முற்றும்
    பகருநந் தீச சரணம்
திடமுறு மாதிசைவ மறையோர் செருக்கைச்
    சிதைவித்த வார்த்த சரணம்
விடலரு மூர்த்திதீர்த்தந் தலமூன்று மோங்கு
    வியன்ஞான வைப்ப சரணம். (௯௯)

சரதம தாகபாகி ரதிநோற்றி வர்ந்த
    தழைசடா டவிய சரணம்
விரதர்கண் மூழ்குமொன்பான் றடம்வாய்ந் திலங்கு
    விரிநீர்த் தலத்த சரணம்
வரதவ னீடுசென்னி யதுகீண் டுயர்ந்த
    வளநாவ லேச சரணம்
பரவுறு மெளியனேற்கின் கருண்மாரி தூற்றும்
    பரியகா ரணிய சரணம். (௧௦௦)

---

திருவானைக்காப் பதிற்றுப்பத்தந்தாதி.

முற்றிற்று.

---

# விளம்பரம்.

இப்புத்தகமும் இந்நூலாசிரியரால் தமிழில் வசன நடையாக வெழுதப்பட்ட காந்திமதி யென்னும் புத்தகமு(ம்) வேண்டியவர்கள், இந்நூலாசிரியரிடத்திலும், சென்னை தொண்டைமண்டலம் ஐஸ்கூல் தமிழ்த் தலைமைப்பண்டிதர் திரு, வி, சிவப்பிரகாசையரவர்களிடத்திலும், முத்தியாலு பேட்டை தம்புசெட்டிவீதி 289 - வது நெம்பர் மகா-ள-ள-ஸ்ரீ, வெ. புஷ்பரதச்செட்டி அண்டு கம்பெனியாரிடத்திலும் அடியிற்கண்டபடி விலைகொடுத்துப் பெற்றுக்கொள்ளலாம்.

விலை.

| | |
|---|---|
| திருவானைக்காப் பதிற்றுப்பத்தந்தாதி | 0—1—6. |
| காந்திமதி ........................................ | 0—8—0 |

## சோதனைப்பத்திரம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| 12 | 22 | பலையான் | பலையாண் |
| 19 | 4 | வீணாவென | வீணரென் |
| ,, | 11 | தூதுறு | தூது |
| 21 | 7 | எழு | என் |